# ஸ்ரீவரிவஸ்யா-ரஹஸ்யம்

(ஸ்ரீ பாஸ்கர ராயர் இயற்றியது)

# ॥ श्रीवरिवस्या-रहस्यम् ॥

(श्री भास्करराय-प्रणीतम्)

உரை ஆசிரியர்

"அண்ணா"

கணேஷ் & கம்பெனி

சென்னை - 600017

# ஸ்ரீவரிவஸ்யா - ரஹஸ்யம்

(ஸ்ரீ பாஸ்கர ராயர் இயற்றியது)

# ॥ श्रीवरिवस्या - रहस्यम् ॥

(श्री भास्करराय - प्रणीतम्)


உரை ஆசிரியர்

" அண்ணா "



கணேஷ் & கம்பெனி

சென்னை - 600017

# முகவுரை

இந்நூலை எழுதிய பாஸ்கரராயர் மகாராஷ்டிரத்தில் பாகா என்னும் நகரத்தில் கி. பி. **1690**ல் பிறந்தவர். தந்தை பெயர் கம்பீர ராயர். தாய் கோனமாம்பா. விச்வாமித்ர கோத்ரம். இவருடைய தந்தை சிறந்த வித்துவான். ஒரு சமயம் விஜய நகர அரச சபையில் மகாபாரதப் பிரவசனம் செய்து 'பாரதி' என்னும் பட்டப் பெயரைப் பரம்பரை உரிமையுடன் பெற்றவர்.

கம்பீரராயர் தன் மகனைக் காசிக்கு அழைத்துச் சென்று அங்கேயே உபநயனம் செய்வித்து ஸரஸ்வதி மகா மந்திரத்தை உபதேசித்து ஸ்ரீ நரசிம்ம அத்வரி என்பவரிடத்தில் அத்தியயனம் செய்வதற்கு ஏற்பாடு செய்தார். அவரிடம் எல்லா வித்தைகளையும் பாஸ்கரராயர் வெகு விரைவில் கற்றுக்கொண்டார் இவர் எழுதிய லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் தொடக்கத்தில் இவரைப்பற்றிப் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது.

श्रीगम्भीर - विपश्चितः पितुरभूद्यः कोनमाम्बोदरे
त्रियाष्टादशकस्य मर्मभिरभूच्च श्रीनृसिंहाद्गुरोः ।
यश्च श्रीशिवदत्तशुक्ल - चरणैः पूर्णाभिषिक्तोऽभवत्
स त्रेता त्रिपुरा त्रयीति मनुते तामेव नाथत्रयीम् ॥

'யாருக்கு கம்பீரராயர் என்னும் மகா பண்டி தரும், கோனமாம்பாவும் பெற்றோர்களோ, யாருக் குப் பதினெட்டு வித்தைகளின் மர்மங்களையும் அறிந்த ஸ்ரீ நரசிம்மானந்த நாதர் குருவோ, யாருக்கு ஸ்ரீ சிவதத்த சுக்ல சரணர் பூர்ணாபிஷேகம் செய்து வைத்தவரோ அவர் — பாஸுரானந்தர் என்ற பாஸ்கரராயர்—தக்ஷிணாக்னி—கார்ஹபத்யம்—ஆஹ வனீயம் என்னும் அக்னிகளிலும், ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்களிலும், ருக் - யஜுஸ் ஸாமம் என் னும் வேதங்களிலும் உறைபவளாக மூன்று குருக் களின் ஸ்வரூபிணியான அந்த திரிபுர ஸுந்தரீ தேவியை ஆராதிப்பவர்.'

வித்தியாப்பியாசத்திற்குப்பின் இவர் ஆனந்தீ என்னும் கன்னிகையை மணந்து அவளிடம் பாண்டு ரங்கன் என்ற புத்திரனைப் பெற்றார். மனைவிக்கு ஸ்ரீ வித்யா தீக்ஷை செய்து வைத்து அவளுக்கு பத்மாவதி அம்மாள் என்ற தீக்ஷா நாமத்தை அளித் தார்.

பிறகு தேசாடனம் செய்கையில் கூர்ஜரத்தில் பார்வதி என்னும் கன்னிகையையும் கலியாணம் செய்து கொண்டார். இரு மனைவிகளுடன் காசியில் வசித்துக்கொண்டு தர்ம ஸ்தாபனத்திற்காகப் பல நூல்களை எழுதினார். பல சீடர்கள் சேர்ந்தனர். வேதாந்தம், மீமாம்ஸம், வியாகரணம், நியாயம், ஸ்ம்ருதி, மந்திரசாஸ்திரம் முதலிய ஆராய்ச்சி நூல் கள் இவராலியற்றப் பெற்றவை நாற்பதுக்குமேல்

உள்ளன, லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் மேற்கோள்களாக அவர் காட்டியிருக்கும் நூல்களின் எண்ணிக்கை நூற்றைம்பதுக்கு மேலாக உள்ளன. இவற்றையெல்லாம் கவனித்தால் அவருக்குத் தெரியாத புராதன வித்தையே இல்லை என்று காணப்படும். பாஸ்கரராயரின் சிஷ்யரான உமாநந்தநாதர் எழுதிய 'பாஸ்கர விலாஸம்' என்னும் நூலில் அவர் கூறுவதாவது :

यस्यादृष्टो नास्ति भूमण्डलांशो
यस्यादासो विद्यते न क्षितीशः ।
यस्यासाध्या नास्ति विद्या किमन्यै-
र्यस्याकारः सा परा शक्तिरेव ॥

'இப் புவியில் அவரால் பார்க்கப்படாத இடம் இல்லை; அவருக்குச் சிஷ்யனாகாத அரசனே இல்லை; அவருக்கு அஸாத்யமான வித்தையே ஒன்றுமில்லை. வேறு சொல்வானேன், அவரே பராசக்தி ஸ்வரூபம்.'

இவருடைய செல்வந்தர்களான சிடர்களின் உதவியைக் கொண்டு பல புராதனக் கோவில்களைப் புதுப்பிக்கவும், புதிய ஆலயங்களை நிர்மாணம் செய்யவும் ஆங்காங்கு இவர் ஏற்பாடு செய்திருக்கிறார்.

காசியிலிருந்து புறப்பட்டுத் தெற்கே வருகையில் சந்திரசேனன் என்ற ஒரு சிற்றரசனுடைய வேண்டு

கோளுக்கு இணங்கி கிருஷ்ணா நதிக்கரையில் சிறிது காலம் தங்கிவிட்டுப் பின்பு தஞ்சாவூர் அரசனால் அழைக்கப்பட்டு காவிரிக்கரைக்குக் குடியேறினார். அங்கு இவர் பெயரால் பாஸ்கரராஜபுரம் என்று ஒரு அக்ரஹாரம் நிறுவப்பட்டது இவருடைய தர்க்க சாஸ்திர குருவாகிய கங்காதரவாஜபேயி என்பவர் வசித்த திருவாலங்காடு என்னும் க்ஷேத்திரத்திற்கு எதிரில் உள்ளது பாஸ்கரராஜபுரம்.

இங்கிருந்து கடைசியாக மத்யார்ஜுனம் எனப் பெயர் பெற்ற திருவிடைமருதூருக்குச் சென்று அங்கேயே 95 வயது வரை (கி.பி. 1690 - 1785) வாழ்ந்தார்.

ஸ்ரீ பாஸ்கரராயர் எழுதிய பல நூல்களுள் பிரசித்தமானவை 'ஸௌபாக்ய பாஸ்கரம்' என்று பெயர் பெற்ற ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம், 'ஸேது பந்தம்' என்ற நித்யா ஷோடசிகார்ணவ பாஷ்யம், 'வரிவஸ்யா ரஹஸ்யம்'. இம்மூன்றும் ஸ்ரீவித்தையின் பிரஸ்தானத்ரயம் எனப் போற்றப் படுவன.

வரிவஸ்யா என்றால் உபாஸனை எனப் பொருள் படும். ஸ்ரீவித்யோபாஸனையின் ரகசியங்களை இந்நூலில் பாஸ்கர ராயர் விளக்குகிறார். அவர் கூறுவதாவது:- அர்த்தஞானமில்லாமல் மந்திரங்களை உச்சரித்தல் பயனளிக்காது. நெருப்பில்லாத சாம்பலில் போடப்பட்ட ஹவிஸ்ஸானது ஜ்வலிக்காது. அறம் பொருள் இன்பம் வீடு என்ற புரு

ஷார்த்தங்கள் பரிவுடன் அறியத்தக்கவையாம். அர்த்தத்தை ஆதரிக்காதவர்களுக்குப் புருஷார்த்தம் இல்லவே இல்லை. தவிர அனர்த்தம் உண்டாகும். (வரிவஸ்யா ரஹஸ்யம் 2 1-1.)

இந்நோக்கத்துடன் ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் ரஹஸ்யார்த்தங்கள் இந்நூலில் வெகு விரிவாகக் கூறப்படுகின்றன.

ஸம்ஸ்கிருதத்தில் அதிகப் பயிற்சி இல்லாதவர்களுக்கும் இந்நூலில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தமிழில் கூடியவரை விளக்குவதற்காக இப்பதிப்பு வெளியிடப்படுகிறது. மூலம் முதலில் நாகர எழுத்திலும் அதனடியில் தமிழ் எழுத்திலும் அச்சிடப்பட்டிருப்பதுடன் பதவுரையும் வியாக்கியானக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

நூலைப் பரிசோதித்துப் பிழைகளைத் திருத்துவதில் உதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும் இதை வெளியிடும் கணேஷ் கம்பெனியாருக்கும் இதைப்படித்துப் பயன்படுத்தி என் முயற்சியை ஸார்த்தகமாக்கும் அன்பர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம்
மயிலாப்பூர், சென்னை - 4.
ராக்ஷஸ ஸு வைகாசிமீ பௌர்ணமி
24 — 5 — 75

" அண்ணா "
உரையாசிரியர்

श्रीः

# ॥ श्री वरिवस्या-रहस्यम् ॥

## प्रथमांशः

ஸ்ரீ:

# ஸ்ரீ வரிவஸ்யா - ரஹஸ்யம்

## ப்ரதமாம்சஃ

### श्रीगुरुस्तोत्र - मंगलम्

विद्यानां च मनूनां मनुसंख्यानां च विद्यानाम् ।
उपदेष्टा जयतितरां नरसिंहानन्दनाथ - गुरुः ॥

### ஸ்ரீ குருஸ்தோத்ர - மங்களம்

வித்யானாஞ் ச மனூனாம்
மனுஸங்க்யானாஞ் ச வித்யானாம் ।
உபதேஷ்டா ஜயதிதராம்
நரஸிம்ஹானந்தநாத- குருஃ ॥

(வித்யானாம்) எல்லா உபாஸனா மார்க்கங்களுக்கும் (மனூனாம் ச) மந்திரங்களுக்கும் (மனு- ஸங்க்யானாம்) பதினான்கு என்ற கணக்குடைய (வித்யானாம் ச) வித்யா ஸ்தானங்களுக்கும் (உபதேஷ்டா) உபதேச கர்த்தாவான (நரஸிம்ஹானந்த - நாத - குருஃ) நரசிம்மானந்த நாதர் என்ற குரு (ஜயதிதராம்) வெற்றியுடன் விளங்கட்டும்.

வித்யா—உபாஸனு மார்க்கம். ஒ. ஸ்ரீ வித்யா, தஹர-வித்யா, சாண்டில்ய - வித்யா முதலியன.

மனு—மந்திரம் என்று ஒரு அர்த்தம். மன்வந்தராதிபதியான மனு என்பது மற்றொரு அர்த்தம்; மன்வந்திரங்கள் பதினுன்கானதால் மனு என்னும் சொல்லுக்குப் பதினுன்கு என்றும் பொருள்.

பதினுன்கு வித்யாஸ்தானங்கள்—வேதம் 4, வேதாங்கம் 6, மீமாம்ஸா 1, நியாய சாஸ்திரம் 1, தர்ம சாஸ்திரம் 1, புராணம் 1, ஆக 14.

நரசிம்மானந்த நாதர்— இந்நூலாசிரியராகிய பாஸுரானந்த- நாதர் என்ற பாஸ்கரராயரின் குரு. தத்வ ஞானத்தின் அடைவிற்கு குருவே மூலகாரணமாதலால் முதலில் குரு வந்தனம் நூலுக்கு மங்களமாயமைகிறது.

वरिवस्या-रहस्याख्यो ग्रन्थो यः स्वेन निर्मितः ।
तत्र दुर्घट-शब्दाना-मर्थः संक्षिप्य कथ्यते ॥

வரிவஸ்யா- ரஹஸ்யாக்க்யோ
க்ரந்தோ யஃ ஸ்வேன நிர்மிதஃ ।
தத்ர துர்க்கட - சப்தாஞு -
மர்த்தஃ ஸம்க்ஷிப்ய கத்யதே ॥

(வரிவஸ்யா ரஹஸ்யாக்க்யஃ) வரிவஸ்யா - ரஹஸ்யம் எனப்பட்ட (யஃ) எந்த (க்ரந்தஃ) நூலானது (ஸ்வேன) என்னுல் (நிர்மிதஃ) ஆக்கப்பட்டதோ (தத்ர) அதில் (துர்க்கட-சப்தாஞும்) கடினமான சொற்களுக்கு (அர்த்தஃ) அர்த்தமும் (ஸம்க்ஷிப்ய) சுருக்கமாக (கத்யதே) கூறப்படுகிறது.

வரிவஸ்யா ரஹஸ்ய மூல சுலோகங்களுக்கு ஸ்ரீ பாஸ்கரராயர் தாமே ஸம்ஸ்க்ருதத்தில் விளக்க உரையும் எழுதியுள்ளார். அதைப் பின்பற்றியே இங்கு தமிழுரை ஆக்கப்பட்டிருக்கிறது.

प्रह्लादाभीष्टदाने विबुधसमुदय - स्तूयमानापदाने
शेषक्षोणीभृदन्तः प्रविलसित-पदाहोबल-क्षेत्र-गर्भात् ।
प्रादुर्भूते हिरण्य-द्विरद्-मतिमद्-ध्वान्त-तन्त्रं निहन्तु
घोरे सच्छास्त्रयोनौ मम भुवनगुरावस्तु भक्ति-र्नृसिंहे ॥

ப்ரஹ்லாதாபீஷ்டதானே விபுத-
ஸமுதய- ஸ்தூயமாஞபதானே
சேஷக்ஷோணீ- ப்ருதந்தஃ ப்ரவிலஸித-
பதாஹோபல- க்ஷேத்ர- கர்ப்பாத் ।
ப்ராதுர்ப்பூதே ஹிரண்ய- த்விரத- மதிமத-
த்வாந்த- தந்த்ரம் நிஹந்தும்
கோரே ஸச்சாஸ்த்ரயோநௌ மம புவன-
குராவஸ்து பக்திர்-ந்ருஸிம்ஹே ‖ 1 ‖

1. இந்த சுலோகம் பிரஹ்லாதருக்கு அபீஷ்டதானம் செய்த பகவான் நரசிம்மருக்கும் பாஸ்கரராயருக்கு அருள் புரிந்த குரு நரசிம்மானந்த நாதருக்கும் சிலேடை.

நரசிம்மபரமான அர்த்தம்— (ப்ரஹ்லாதாபீஷ்டதானே) பிரஹ்லாதருக்கு அபீஷ்டதானம் செய்த பொழுது (விபுத- ஸமுதய) தேவ சமூகத்தால் (ஸ்தூயமான) துதிக்கப்பெற்ற (அபதானே) பெருமையுடையவரும், (சேஷக்ஷோணீ-ப்ருதந்தஃ) சேஷாசலத் தொடர்ச்சியினுள்

(ப்ரவிலஸித) விளங்குவதாய் (பத) இடங்கொண்ட (அஹோபல-க்ஷேத்ர - கர்ப்பாத்) அஹோபல க்ஷேத்திரத்தின் மத்தியில்- (ஹிரண்ய) ஹிரண்ய கசிபு என்ற (மத-த்வாந்த - தந்த்ரம்) இருண்ட மதம்பிடித்த (த்விரதம்) யானையை (நிஹந்தும்) கொல்லுவதற்கு (ப்ராதுர்ப்பூதே) அவதாரம் செய்தவரும் (நீரே) தைரியமே உருக்கொண்டவரும் (ஸச்சாஸ்த்ர-யோநௌ) ஸச்சாஸ்திரங்களுக்கு மூலகாரணரும் (புவன-குரௌ) உலகிற்குக் குருவும் ஆகிய (ந்ருஸிம்ஹே) நரசிம்ம பகவானிடத்தில் (மம) என்னுடைய (பக்திஃ) பக்தியானது (அஸ்து) நிலைத்திருக்கட்டும்.

குருபரமான அர்த்தம்— (ப்ரஹ்லாத-அபீஷ்டதானே) உத்தமமான பிரம்மானந்தத்தை அருளும் விஷயத்தில் (விபுத-ஸமுதய - ஸ்தூயமானுபதானே) வித்வத் ஸமூகத்தால் துதிக்கப்பெற்ற பெருமையுடையவரும் (அசேஷ க்ஷோணீ-ப்ருத் - அந்தஃ) மிகுதியின்றி எல்லா அரசர்களிடையும் (ப்ரவிலஸித) விளங்கும் (பத) பாதாரவிந்தங்களை உடையவரும் (அஹோபல - க்ஷேத்ர - கர்ப்பாத்) அஹோபல பண்டிதருக்கு அவருடைய மனைவியின் கருவினின்று, (ஹிரண்ய - த்விரத) செல்வத்தாலும் யானை முதலிய பரிவாரத்தாலும் (மதி - மத) மதிகெட்டு மதங்கொண்ட (த்வாந்த-தந்த்ரம்) 'த்வ' என்ற இடைப்பதமுடைய மாத்வர்களின் சாஸ்திரத்தை (நிஹந்தும்) அழிப்பதற்காக - (ப்ராதுர்ப்பூதே) தோன்றியவரும் (நீரே) புத்தியிற் சிறந்தவரும் (ஸச்சாஸ்த்ரயோநௌ) ஸச்சாஸ்திரங்களுக்குப் பிறப்பிடமாய் விளங்கியவரும் (புவன் - குரௌ) உலகிற்கு குருவும் ஆகிய (ந்ருஸிம்ஹே) நரசிம்மானந்த நாதரிடத்தில் (மம) என்னுடைய (பக்திஃ) பக்தியானது (அஸ்து) நிலைத்திருக்கட்டும்.

विद्वत्समाज - तोषाशंसा

आ प्राचः कामरूपाद् द्रुहिणसुत-नद-प्लाविता-दाप्रतीचो
गान्धारात् सिन्धुसान्द्रा-द्रघुवरचरिता- दा च सेतो-रवाचः ।
आ केदारा-दुदीच-स्तुहिनगहनतः सन्ति विद्वत्समाजा
ये ये तानेष यत्नः सुखयतु समजान् कश्चमत्कर्तु-मीष्टे ॥ २ ॥

வித்வான்களின் ஸந்தோஷத்தை நாடுதல்

*ஆ ப்ராச: காமரூபாத் த்ருஹிணஸுத-*
*நத-ப்லாவிதா-தாப்ரதீசோ*
*காந்த்தாராத் ஸிந்த்துஸாந்த்ராத்-*
*ரகுவரசரிதா-தா ச ஸேதோ- ரவாச:।*
*ஆ கேதாரா-துதீசஸ்-துஹிந- கஹநத:*
*ஸந்தி வித்வத் ஸமாஜா*
*யே யே தாநேஷ யத்ன: ஸுகயது*
*ஸமஜான் கச்சமத்கர்த்து- மீஷ்டே ॥ 2 ॥*

*2. (ஆ- ப்ராச:) கிழக்கில் (த்ருஹிணஸுத-நத - ப்லாவிதாத்) பிரம்மபுத்திரா நதி பிரவகிக்கும் (காம ரூபாத்) காமருபத்திலிருந்து (ஆ-ப்ரதீச:) மேற்கில் (ஸிந்து - ஸாந்த்ராத்) சிந்துநதி பாயும் (காந்த்தாராத்) காந்தார தேசம் வரையிலும், (அவாச:) தெற்கே (ரகுவர சரிதாத்) ரகுகுல சிரேஷ்டரான ஸ்ரீ ராமரால் நிர்மாணம் செய்யப்பட்ட (ஆ ச ஸேதோ:) ஸேது பந்தம் முதல் (உதீச:) வடக்கில் (ஆ-கேதாராத்) பனி மூடிய கேதாரம் வரையிலும் (யே யே) எந்தெந்த (வித்வத் ஸமாஜா:) வித்வத் ஸமாஜங்கள் (ஸந்தி) உள்ளனவோ (தான்) அவர்களை (ஏஷ யத்ன:) இந்த என்னுடைய முயற்சியின்*

பயனுகிய நூல் (ஸுகயது) இன்புறச் செய்யட்டும். (ஸம ஜான்) கல்லாதவர் கூட்டங்களை (கঃ) யார்தான் (சமத் கர்த்தும்) திருப்திசெய்விக்க (ஈஷ்டே) இயலும் ?

வித்வத் ஸமாஜங்கள்— 'ந சில்பாதி ஜ்ஞான - யுக்தே வித்வச்சப்தঃ ப்ரயுஜ்யதே' என்று த்ரிசதீ கூறியுள்ளபடி சில்பம் முதலிய ஞானம் படைத்தவர்களை வித்வத் சப்தம் குறிப்பிடாததால் ஸ்ரீ வித்யோபாஸகர்களாகிய வித் வான்களே இங்கு கூறப்பட்டவர்கள்.

ஒ• 'பசூனும் ஸமஜோऽன்யேஷாம் ஸமாஜঃ' மிருகப் பிராய மானவர்களின் கூட்டம் ஸமஜம்'. மற்றவர்களின் குழாம் ஸமாஜம். —அமரம்.

ज्ञेयब्रह्मरूप-प्रकाशोत्कर्षः

स जयति महान् प्रकाशो यस्मिन् दृष्टे न दृश्यते किमपि ।
कथमिव तस्मिन् ज्ञाते सर्वं विज्ञात-मुच्यते वेदे ॥ ३ ॥

ஜ்ஞேய - ப்ரஹ்மரூப - ப்ரகாசச் சிறப்பு

ஸ ஜயதி மஹான் ப்ரகாசோ யஸ்மின்
த்ருஷ்டே ந த்ருச்யதே கிமபி ।
கதமிவ தஸ்மின் ஜ்ஞாதே ஸர்வம்
விஜ்ஞாத- முச்யதே வேதே ॥ 3 ॥

3. (யஸ்மின் த்ருஷ்டே) எது காணப்பட்டால் (கிம் அபி) வேறு எதுவும் (ந த்ருச்யதே) காணப்படுவதில் லையோ (ஸ ஜயதி மஹான்) அந்தப் பரம்பொருள் வெற்றியுடன் விளங்கட்டும். (வேதே) இங்ஙனம் கூறிய வேதத்தில் '(தஸ்மின் ஜ்ஞாதே) அது அறியப்பட்டால்

(ஸர்வம் விஜ்ஞாதம்) எல்லாம் நன்கு அறியப்பட்டதாகும்' என்று (கதமிவ உச்யதே) எப்படி கூறப்படலாம்?

ஒன்றும் காணப்படுவதில்லை என்று கூறிவிட்டு எல்லாம் அறியப்படும் என்று கூறுவது எப்படிப் பொருந்தும் என்பது கேள்வி. (விடை அடுத்த சுலோகத்தில்)

ஓ. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்।
— கட. உப. 5-15.

கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதீதி।
—மு. உப. 1-1-3

## विमर्शात्मक-शक्तिस्वरूप-निरूपणम्

नैसर्गिकी स्फुरत्ता-विमर्शरूपाऽस्य वर्तते शक्तिः ।
तद्योगादेव शिवो जगदुत्पादयति पाति संहरति ॥ ४ ॥

விமர்சாத்மக - சக்தி ஸ்வரூப - விளக்கம்

நைஸர்க்கிகீ ஸ்ப்புரத்தா- விமர்ச-
ரூபாऽஸ்ய வர்த்ததே சக்தி: ।
தத்யோகாதேவ சிவோ ஜக-
துத்பாதயதி பாதி ஸம்ஹரதி ॥ 4 ॥

4. (நைஸர்க்கிகீ) இயற்கையாக (ஸ்ப்புரத்தா - விமர்சரூபா) ஸ்புரணவிமர்ச வடிவான (சக்தி:) ஒரு சக்தியானது (அஸ்ய) இந்தப் பிரம்மத்திற்கு (வர்த்ததே) உள்ளது. (தத்- யோகாத் ஏவ) அத்துடன் கூடியே (சிவ:) சிவமெனும் அந்தப் பிரம்மம் (ஜகத்) உலகை (உத்பாதயதி) உற்பத்தி செய்கிறது, (பாதி) காப்பாற்றுகிறது. )ஸம்ஹரதி) அழிக்கிறது.

சக்தியுடன்கூடி அந்த பிரம்மம் இவ்வனைத்துமாய் விளங்குகிறது என்பது அறியப்பட்டால் எல்லாம் அறியப்பட்டதாகும் என்பது சுலோகம் 3ல் கேட்ட கேள்விக்கு விடை.

ஓ. 'சிவஃ சக்த்யா யுக்தோ யதி பவதி சக்தஃ ப்ரபவிதும்
ந சேதேவம் தேவோ ந கலு குசலஃ ஸ்பந்திது-மபி ।
— ஸௌ. லஹரீ. 1.

साऽवश्यं विज्ञेया यत्परिणामा-दभूदेषा ।
अर्थमयी शब्दमयी चक्रमयी देहमय्यपि च सृष्टिः ॥ ५ ॥

ஸாऽவச்யம் விஜ்ஞேயா
யத்பரிணாமா- தபூதேஷா ।
அர்த்தமயீ சப்தமயீ சக்ரமயீ
தேஹமய்யபி ச ஸ்ருஷ்டிஃ ॥ 5 ॥

5. (யத் பரிணாமாத்) எதன் பரிணமத்தால் (ஏஷா) இந்த (அர்த்தமயீ) முப்பத்தாறு தத்வ ரூபமானதும் (சப்தமயீ) பரா பச்யந்தீ மத்யமா வைகரீ என்ற சப்த வடிவானதும் (சக்ரமயீ) பிந்து முதல் பூபுரம் வரை உள்ள ஸ்ரீ சக்ரவடிவ்வானதும் (தேஹமயீ அபி ச) காரணம், ஸூக்ஷ்மம், ஸ்தூலம் என்று தேகமயமும் ஆகிய (ஸ்ருஷ்டிஃ) சிருஷ்டியானது தோன்றியுளதோ (ஸா) அந்தச் சிச்சக்தியானது (அவச்யம் விஜ்ஞேயா) நிச்சயமாக அறியப்படவேண்டும்.

அவச்யம்— 'ஸர்வ - விஜ்ஞான - ஸாதனத்வான் - மோக்ஷாதி - புருஷார்த்த - ப்ரதத்வாச்ச' அனைத்தையும் அறியச் சாதனமாக இருப்பதாலும், மோக்ஷம் முதலிய புருஷார்த்தத்தை அளிப்பதாலும்.

तज्ज्ञानार्थं चतुर्दशविद्यासार-वेदसारभूता -
गायत्री

तज्ज्ञानार्थ - मुपाया विद्या लोके चतुर्दश प्रोक्ताः ।
तेष्वपि च सारभूता वेदास्तत्रापि गायत्री ॥ ६ ॥

அதை அறியப் பதினன்கு வித்தைகளின்
ஸாரமாகவும் வேதஸாரமாகவும் உள்ள காயத்ரீ.

தஜ்ஜ்ஞார்த்த-முபாயா-வித்யா
லோகே சதுர்த்தச ப்ரோக்தாः ।
தேஷ்வபி ச ஸாரபூதா
வேதாஸ் தத்ராபி காயத்ரீ ॥ 6 ॥

6. (தத்- ஜ்ஞானர்த்தம்) சித்சக்தியாகிய அதை அறிவதற்கு (உபாயாः) உபாயமான (வித்யாः) வித்தைகள் (லோகே) உலகில் (சதுர்த்தச) பதினன்கு (ப்ரோக்தாः) — பரமேசுவரனல் — போதிக்கப்பட்டிருக்கின்றன.(தேஷு அபி ச) அவைகளிலும் கூட (ஸாரபூதாः) ஸாரமானவை (வேதாः) வேதங்கள். (தத்ராபி) அதிலும்— ஸாரமானது—(காயத்ரீ) காயத்ரீ மஹாமந்திரம்.

லோகே— 'லோகனஹேதுபூதே ஸமஸ்த - வித்யாஸ்த்தானே' உண்மையைக் காண்பதற்குக் காரணமான வித்யாஸ்தானம் முழுவதிலும்.

பதினன்கு— குருஸ்தோத்திரமாகிய முதல் சுலோகத்தின் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

गायत्र्या द्वैरूप्यं तन्महिमा च

तस्या रूप-द्वितयं तत्रैकं यत्प्रपठ्यतेस्पष्टम् ।
वेदेषु चतुर्ष्वपि परमत्यन्तं गोपनीयतरम् ॥ ७ ॥

காயத்ரியின் இரண்டு ரூபமும் மகிமையும்

தஸ்யா ரூப த்விதயம் தத்ரைகம்
யத்ப்ரபட்யதேஸ்பஷ்டம் ।
வேதேஷு சதுர்ஷ்வபி பர –
மத்யந்தம் கோபனீய - தரம் ॥ 7 ॥

7. (தஸ்யாஃ) அந்த காயத்ரியின் (ரூபத்விதயம்) ரூபங்கள் இரண்டு; (தத்ர) அதில் (ஏகம்) ஒன்று (வேதேஷு சதுர்ஷ்வபி) நான்கு வேதங்களிலும் (யத்) எது (ப்ரபட்யதே ஸ்பஷ்டம்) ஸ்பஷ்டமாகவும் — அஸ் பஷ்டமாகவும் — கூறப்பட்டுள்ளதோ அது. (பரம்) இரண்டாவதான மற்றொன்று (அத்யந்தம் கோபனீய - தரம்) அதைக் காட்டிலும் மிக ரகசியமாகக் கருதப் படுவது—அதாவது ஸ்ரீ வித்யா.

ஸ்பஷ்டம் —'ஸ்பஷ்டம் அஸ்பஷ்டஞ்சேதி பதச்சேத ஆவ்ருத்த்யா'. சரணத்ரயம் 'தத் ஸவிதுஃ' இத்யாதி ஸ்பஷ்டம்; 'பரோரஜஸே ஸாவதோம்' இதி சதுர்த்த சரணந்-த்வஸ்பஷ்டமித்யர்த்தஃ. பரம் ஸ்ரீ வித்யாக்க்யம் த்விதீயம் ரூபம்.

सांकेतिक - शब्दैः श्रीविद्याया वेदव्यवहारः

कामो योनिः कमलेत्येव संकेतितैः शब्दैः ।
व्यवहरति न तु प्रकटं यां विद्यां वेदपुरुषोऽपि ॥ ८ ॥

## மறைமுகச் சொற்களால் ஸ்ரீ வித்தையை வேதம் விவகரித்தல்

காமோ யோனிঃ கமலேத்யேவம்
ஸங்கேதிதைঃ சப்தைঃ ।
வ்யவஹரதி ந து ப்ரகடம்
யாம் வித்யாம் வேதபுருஷோऽபி ‖ 8 ‖

8. (காமঃ) காமன் (யோனிঃ) யோனி (கமலா) கமலா (இதி) என்ற (ஏவம்) இப்படிப்பட்ட (ஸங்கேதிதைঃ சப்தைঃ) இரகசிய சப்தங்களால் (வேத புருஷঃ அபி) வேத புருஷரும் (யாம் வித்யாம்) அந்த ஸ்ரீ வித்தையை (வ்யவஹரதி) கூறுகிறார்; (ந து ப்ரகடம்) வெளிப்படையாகக் கூறவில்லை.

ஓ. காமோ யோனிঃ கமலா வஜ்ரபாணிர் - குஹா ஹஸா மாதரிச்வாப்ர - மிந்த்ரঃ । புனঃ குஹா ஸகலா மாயயா ச புரூச்யேஷா விச்வமாதாதி - வித்யா ‖ ஆதி வித்யா அல்லது ஸ்ரீ வித்யா எனப்படும் பஞ்சதசாக்ஷரீ மந்த்ரமாவது காமঃ (க), யோனிঃ (ஏ) கமலா (ஈ), வஜ்ர பாணிঃ (ல), குஹா (ஹ்ரீம்); ஹஸா (ஹ, ஸ) மாதரிச்வா (க), அப்ரம் (ஹ), இந்த்ரঃ (ல); புனர்குஹா (ஹ்ரீம்); ஸகலா (ஸ, க, ல) மாயயா ச (ஹ்ரீம்).

—த்ரிபுரோபநிஷத். 8

ஓ. சிவঃ சக்திঃ காமঃ......ஸௌந்தர்யலஹரீ. 32.

क्रोधीशः श्रीकण्ठारूढः कोणत्रयं लक्ष्मीः ।
मांस-मनुत्तर-रूढं वाग्भवकूटं प्रकीर्तितं प्रथमम् ॥ ९ ॥

க்ரோதீசः ஶ்ரீகண்ட்டாரூடः
கோணத்ரயம் லக்ஷ்மீः ।
மாம்ஸ- மனுத்தர- ரூடம் வாக்பவ-
கூடம் ப்ரகீர்த்திதம் ப்ரதமம் ॥ 9 ॥

9. (க்ரோதீசः ஶ்ரீகண்ட- ஆரூடः) உயிருடன் கூடிய மெய்யெழுத்தான 'க்', (கோணத்ரயம்) முக்கோணம் அல்லது யோனி, அதாவது 'ஏ', (லக்ஷ்மீः) 'ஈ', (மாம்ஸம்) 'ல்' (அனுத்தரரூடம்) முதலெழுத்தான 'அ' உடன் கூடியது (ப்ரதமம்) முதலாவதான (வாக்பவகூடம்) வாக்பவ கூடம் என்று (ப்ரகீர்த்திதம்) கூறப்படுகிறது.

க்ரோதீச ः—ப்ரஹ்மா ச ககாரः—மெய்யெழுத்து 'க்' । ஶ்ரீகண்டோऽனுத்தரமக்ஷரஞ்ச அகாரः । தமாரூடஸ்தேன யுக்தः— உயிர்மெய் யெழுத்து 'க' । கோணத்ரயம்— யோனிः । லக்ஷ்மீ ः— கமலா । மாம்ஸம்— சக்ரச்சேந்த்ரः ॥ 'காமோ யோனிः' என்ற திரிபுரோபநிஷத் மந்திரத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கவும். மந்திர சாஸ்திரத்தில் அக்ஷரங்களுக்கு இப்படியெல்லாம் ஸங்கேதப் பெயர்கள் பல உண்டு.

शिव-हंस-ब्रह्म-वियच्छक्राः प्रत्येक-मक्षरारूढाः ।
द्वैतीयीकं कूटं कथितं तत्कामराजाख्यम् ॥ १० ॥

சிவ-ஹம்ஸ-ப்ரஹ்ம-வியச்சக்ராः
ப்ரத்யேக- மக்ஷராரூடாः ।
த்வைதீயீகம் கூடம் கதிதம்
தத் காமராஜாக்ய்யம் ॥ 10 ॥

10. (சிவ) 'ஹ்' (ஹம்ஸ) 'ஸ்' (ப்ரஹ்ம) 'க்' (வியத்) 'ஹ்', (சக்ராஃ) 'ல்', (ப்ரத்யேகமக்ஷர- ஆரூடாஃ) ஆகிய ஒவ்வொன்றுடனும் 'அ' சேர்ந்து (த்வைதீயீகம்) இரண்டாவதான (கூடம்) கூடம் என்று (கதிதம்) கூறப்படும். (தத்) அது (காமராஜாக்க்யம்) காமராஜம் எனப்படும்.

கூடம்— அக்ஷரஸமூஹத்வாத் கூடத்வ- வ்யபதேசஃ ।। அக்ஷரங்களின் தொகுதிக்குக் 'கூடம்' எனப் பெயர்.

शिवतो वियतो मुक्तं तृतीय-मिदमेव शक्तिकूटाख्यम् ।
हृल्लेखानां त्रितयं कूटत्रितयेऽपि योज्यमन्ते स्यात् ॥ ११ ॥

சிவதோ வியதோ முக்தம் த்ருதீய-
மிதமேவ சக்திகூடாக்க்யம் ।
ஹ்ருல்லேகானும் த்ரிதயம் கூடத்ரிதயேऽபி
யோஜ்ய-மந்தே ஸ்யாத் ॥ 11 ॥

11. ஹ-ஸ-க-ஹ-ல என்று முன்பு கூறியதில்— (சிவதஃ) சிவ பீஜமான 'ஹ' (வியதஃ) ஆகாசபீஜமான 'ஹ'— ஆகிய இரண்டும்—(முக்தம்) நீங்கலாக—எஞ்சிய ஸ-க-ல என்றது (த்ருதீயம்) மூன்றாவது; (இதம் ஏவ) இதுவே (சக்தி கூடாக்க்யம்) சக்தி கூடம் எனப்படுவது. (ஹ்ருல்லேகானும் த்ரிதயம்) ஹ்ரீம், ஹ்ரீம், ஹ்ரீம் என்ற மூன்றும் (கூடத்ரிதயேऽபி) மூன்று கூடங்களிலும் (அந்தே) முடிவில் (யோஜ்யம் ஸ்யாத்) சேர்க்கப்பட வேண்டும்.

## हृल्लेखास्वरूपं नादशब्द वाच्यं च

हृल्लेखायाः स्वरूपन्तु व्योमाग्नि-वामलोचना ।
बिन्द्वर्धचन्द्र-रोधिन्यो नाद-नादान्त-शक्तयः ॥ १२ ॥

व्यापिका-समनोन्मन्य इति द्वादश-संहतिः ।
बिन्द्वादीनां नवानां तु समष्टि-र्नाद उच्यते ॥ १३ ॥

**ஹ்ரீங்காரத்தின் ஸ்வரூபம் நாதமாகவும் அக்ஷரமாகவும் உள்ளதென்பது.**

*ஹ்ருல்லேகாயா: ஸ்வரூபம் து*
*வ்யோமாக்னிர்- வாமலோசனா ।*
*பிந்த்-வர்த்தசந்த்ர-ரோதின்யோ*
*நாத- நாதாந்த- சக்தய: ‖* 12 ॥

*வ்யாபிகா-ஸமனோன்மன்ய*
*இதி த்வாதச - ஸம்ஹதி: ।*
*பிந்த்வாதீனாம் நவானாம் து*
*ஸமஷ்டிர் - நாத உச்யதே ॥* 13 ॥

*12- 13. (ஹ்ருல்லேகாயா:) ஹ்ருல்லேகை என்னும் 'ஹ்ரீம்' பீஜத்திற்கு (ஸ்வரூபம் து) ஸ்வரூபமோ எனின் (வ்யோம) ஆகாயம் அதாவது 'ஹ்', (அக்னி:) அக்னி அதாவது 'ர்', (வாமலோசனா) அழகிய கண் படைத்த தேவி அதாவது 'ஈ', (பிந்து) பிந்து (அர்த்த - சந்த்ர-) சந்திரகலை, (ரோதினி-) ரோதினி (நாத-) நாதம் (நாதாந்த-) நாதாந்தம் (சக்தய:) சக்தி (வ்யாபிகா) வியாபிகை (ஸமனா) ஸமனை (உன்மன்ய:) உன்மனி (இதி) என்ற (த்வாதச- ஸம்ஹதி:) பன்னிரண்டின் தொகுதி. (பிந்த்வாதீனாம்) பிந்து முதல் (நவானாம் து) ஒன்பதின் (ஸமஷ்டி) கூட்டம் (நாத:) நாதம் என்று (உச்யதே) பொதுவாகக் கூறப்படும்.*

வ்யோம — (ஹகாரः கேவலோ, நத்வகார- விசிஷ்டः) அகாரம் சேராத கேவல மெய்யெழுத்து 'ஹ்; (அக்னி ரேபஸ் -தாத்ருசः) அப்படியே அக்னி 'ர்'; (பிந்த்வாதயோ நவாபி ஸூக்ஷ்ம - ஸூக்ஷ்மதர- ஸூக்ஷ்மதம - காலே- ருச் சார்யா த்வனி - விசேஷாः) பிந்து முதலிய ஒன்பதும் வீணா நாதம்போல் மேல் மேலும் ஸூக்ஷ்மமான காலங் களில் உச்சரிக்கப்படும் தொனி விசேஷங்கள்.

चिद्यावर्णयत्तावर्णनम्

**प्रथमेऽष्टादश वर्णा द्वाविंशति-रक्षराणि मध्ये स्युः।**
**प्रथमेन तुल्य-मन्त्यं संघातेनाष्ट-पंचाशत् ॥ १४ ॥**

**மந்திராக்ஷரங்களின் வர்ணக் கணக்கு கூறப்படுதல்**

ப்ரதமேऽ ஷ்டாதச வர்ணா த்வா-
விம்சதி - ரக்ஷராணி மத்த்யே ஸ்யுः ।
ப்ரதமேன துல்ய - மந்த்யம்
ஸங்க்காதேனாஷ்ட - பஞ்சாசத் ॥ 14 ॥

14. (ப்ரதமே) முதல் கூடத்தில் (அஷ்டாதசவர்ணாः) பதினெட்டு வர்ணங்கள்; (மத்த்யே) மத்திய கூடத்தில் (த்வாவிம்சதிः அக்ஷராணி) இருபத்திரண்டு அக்ஷரங்கள் அல்லது வர்ணங்கள் (ஸ்யுः) உண்டு; (அந்த்யம்) கடைசிக் கூடம் (ப்ரதமேன) முதலாவதுடன் (துல்யம்) ஸமமா னது. (ஸங்க்காதேன) எல்லாம் சேர்ந்து (அஷ்ட - பஞ் சாசத்) ஐம்பத்தெட்டு.

வர்ணம்—உயிரெழுத்து ஒரு வர்ணம். மெய்யெழுத்து ஒரு வர்ணம். உயிர் மெய்யெழுத்து இரண்டு வர்ணம். அப்படிக் கணக்கிட்டால் முதல் கூடத்தில் க=2, ஏ=1, ஈ=1, ல=2, ஹ்ரீம்=12 ஆக 18. மத்திய கூடத்தில் ஹ=2, ஸ=2, க=2, ஹ=2, ல=2, ஹ்ரீம்=12 ஆக 22. கடைசி கூடத்தில் ஸ=2, க=2, ல=2, ஹ்ரீம்=12 ஆக 18. மூன்று கூடங்களுக்கும் சேர்ந்து 18+22+18= 58.

ஹ்ரீம்=12 என்பதின் விவரம் 12-13 சுலோகங்களில் காண்க.

### विद्यावर्णानां मात्राकालव्यवस्था

**मात्रा द्वितयोच्चार्या कामकला च त्रिकोणा च।**
**बिन्दुरहित हृल्लेखा मात्रा-काल-त्रयोच्चार्याः ॥ १५ ॥**

### மந்த்ர வர்ணங்களின் மாத்திரைக் காலத்தை வரையறுத்தல்

*மாத்ரா த்விதயோச்சார்யா*
*காமகலா ச த்ரிகோணு ச।*
*பிந்து - ரஹித - ஹ்ருல்லேகா*
*மாத்ரா- கால- த்ரயோச்சார்யாः ॥ 15॥*

15. (காமகலா ச) காமகலை என்னும் ஈ (த்ரிகோணு ச) த்ரிகோணு என்னும் ஏ ஆகியவை (மாத்ராத்விதயா) இரண்டு மாத்திரை காலமாக (உச்சார்யா) உச்சரிக்க வேண்டியவை. (பிந்து - ரஹித) பிந்து நீங்கிய (ஹ்ருல் லேகாः) ஹ்ரீங்காரங்கள் (காலத்ரய-உச்சார்யாः) மூன்று

மாத்திரை காலமாக உச்சரிக்க வேண்டியது (ஹ்ற=½ ர்=½, ஈ=2 ஆக 3).

अन्येषां वर्णानां मात्राकालोऽर्धमात्रया सहितः ।
बिन्दो - रर्धं मात्रा परे परे चापि पूर्व-पूर्वार्धाः ॥ १६ ॥

அன்யேஷாம் வர்ணும் மாத்ரா-
காலோऽர்த்த- மாத்ரயா ஸஹிதঃ ।
பிந்தோரர்த்தம் மாத்ரா பரே
பரே சாபி பூர்வ- பூர்வார்த்தாঃ ॥ 16 ॥

16. (அன்யேஷாம் வர்ணும்) அகாரத்துடன் கூடின மற்ற க—ல—ஹ—ஸ—க—ஹ—ல—ஸ—க—ல என்ற பத்து வர்ணங்களுக்கும் (மாத்ராகாலঃ) மாத்ரா காலம் (அர்த்தமாத்ரயா ஸஹிதঃ) ஒன்றரை மாத்ரை. (பிந்தோঃ) பிந்துவிற்கு (அர்த்தம்) அரை மாத்திரை. (பரே பரே ச அபி) அதற்கு மேல் சந்திரகலை, ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உன்மனை ஆகியவற்றிற்கு (பூர்வ - பூர்வ - அர்த்தா) முன்னது முன்னதிற்குப் பாதி பாதியாக (மாத்ரா) மாத்திரை.

மிகச்சிறிய கால அளவு லவம் எனப்படும். 256 லவம் கொண்டது ஒரு மாத்திரை. பிந்து=½ மாத்திரை அல்லது 128 லவம்; சந்திரகலை=64 லவம்; ரோதினி=32 லவம்; நாதம்=16 லவம்; நாதாந்தம்=8 லவம்; சக்தி=4 லவம் வியாபிகை=2 லவம்; ஸமனை=1 லவம்; உன்மனிக்குக் காலமில்லை.

संहत्यैकलवोनो मात्राकालोऽस्य नादस्य ।
एकादश वाक्कूटे सार्धा एकादशोदिता मध्ये ॥ १७ ॥

ஸம்ஹத்யைகலவோநோ மாத்ரா-
காலோऽஸ்ய நாதஸ்ய ।
ஏகாதச வாக்கூடே ஸார்த்தா
ஏகாதசோதிதா மத்த்யே ॥ 17 ॥

17. (ஸம்ஹத்யா) இவற்றின் மொத்தத்தால் (ஏக லவ- ஊனः) ஒரு லவம் குறைந்த- (மாத்ரா) மாத்திரை— அதாவது 255 லவம்—(அஸ்ய நாதஸ்ய) இந்த நாதத்திற்கு (காலः) காலமாகும். (வாக்-கூடே) வாக்பவ கூடத்தில் (ஏகாதச) பதினொரு மாத்திரைகள் (மத்த்யே) மத்திய கூடத்தில் (ஸார்த்தா- ஏகாதச - உதிதாः) பதினொன்றரை மாத்திரைகள் உள்ளன.

வாக்பவ கூடம்— க-1½, ஏ-2, ஈ-2, ல-1½, ஹ்ரீ- 3, நாதம் ஒரு லவம் குறைய 1; ஆக ஒரு லவம் குறைய 11 மாத்திரை.

மத்ய கூடம்— ஹ-1½, ஸ-1½, க- 1½, ஹ-1½, ல-1½, ஹ்ரீ 3, நாதம் ஒரு லவம் குறைய 1; ஆக ஒரு லவம் குறைய 11½ மாத்திரை.

सार्धा अष्टौ शक्ता-वेकैकलवोनिता मात्राः ।
संहत्यैकत्रिंशन्मात्रा मन्त्रे लवत्रयन्यूनाः ॥ १८ ॥

ஸார்த்தா அஷ்டௌ சக்தா-
வேகைகலவோநிதா மாத்ராः ।
ஸம்ஹத்-யைகத்ரிம்சன் மாத்ரா
மந்த்ரே லவத்ரய- ந்யூனः ॥ 18 ॥

18. (சக்தௌ) சக்தி கூடத்தில் (ஸார்த்தா அஷ்டௌ) எட்டரை மாத்திரைகள்; (ஏக - ஏக - லவ-

ஊநிதா -) ஒவ்வொரு லவம் குறைவாக (மாத்ராஃ) இம் மாத்திரைகளின் அளவு. (ஸம்ஹத்யாஃ) இவற்றின் தொகையால் (மந்த்ரே) மந்திரத்தில் (லவத்ரயந்யூனாஃ) மூன்று லவம் குறைந்த (ஏகத்ரிம்சத் மாத்ராஃ) முப்பத்தொரு மாத்திரைகள்.

சக்தி கூடம்—ஸ-1½, க-1½, ல-½ ஹ்ரீ-3, நாதம் ஒரு லவம் குறைய 1; ஆக 1 லவம் குறைய 8½ மாத்திரை.

மூன்று கூடங்களுக்கும் சேர்ந்து 11+11½+8½=31 (3 லவம் குறைய).

वर्णोत्पत्तिस्थान- बाह्याभ्यान्तर-यत्नाः

**कण्ठे च कण्ठतालुनि तालुनि दन्तेषु मूर्ध्नि नासायाम् ।**
**स्पृष्ट-विवारा-द्यान्तर-बाह्यै-र्यत्नै-स्तदक्षरोत्पत्तिः ॥ १९ ॥**

**வர்ணங்களின் உற்பத்திஸ்தானமும் உள் வெளிப் பிரயத்னங்களும்**

கண்டே ச கண்டதாலுனி தாலுனி
தந்தேஷு மூர்த்த்னி நாஸாயாம் ।
ஸ்ப்ருஷ்ட- விவாராத்- யாந்தர- பாஹ்யைர்-
யத்னைஸ்- ததக்ஷரோத்பத்திஃ ॥ 19 ॥

19. (கண்டே ச) கழுத்திலும் (கண்ட - தாலுனி) கழுத்தும் தாடையும் சந்திக்குமிடத்திலும், (தாலுனி) தாடையிலும் (தந்தேஷு) பற்களிலும் (மூர்த்த்னி) சிரஸிலும் (நாஸாயாம்) மூக்கிலும். (ஸ்ப்ருஷ்ட- விவாராதி) ஸ்ப்ருஷ்டம் விவ்ருதம் முதலிய (ஆந்தர-பாஹ்யைஃ) உள்ளும் வெளியுமான (யத்னைஃ) பிரயத்

தினங்களால்—(தத் அக்ஷர- உத்பத்திஃ) அம்மந்திரத்தின் அக்ஷரங்கள் உற்பத்தியாகின்றன.

ஸ்தானம்— கழுத்தில் க் 3, அ 10, ஹ் 5; கழுத்தும் தாடையும் ஏ 1; தாடை ஈ 4; பல் ல் 3, ஸ் 2; தலை ர் 3; மூக்கு பிந்து முதலிய நாதங்கள் 9 × 3 = 27. ஆக 58 வர்ணங்களுக்கு 58 ஸ்தானங்கள்.

யத்னம்— உள் பிரயத்னம்— ஸ்ப்ருஷ்டம் க்; ஸம்விருதம் அ; விவ்ருதம் ஈ, ஏ; ஈஷத் ஸ்ப்ருஷ்டம் அல்லது சற்றுத்தொடுவது ர், ல்; ஈஷத் விவ்ருதம் ஹ், ஸ்; அதிக ஸம்வ்ருதம் பிந்து முதல் ஒன்பது.

வெளிப்பிரயத்னம்—விவார, ஸம்வார, சுவாஸ, கோஷ, நாத மஹாப்ராண, அல்பப்பிராண, உதாத்த என எழுத்துக்களை உச்சரிப்பதிலுள்ள வெளிப்பிரயத்னங்கள் வியாகரண சாஸ்திரத்தில் விளக்கப்படுகின்றன.

## वर्णस्थिति-स्थानरूपाकार-वर्णनम्

**प्रलयाग्निनिभं प्रथमं मूलाधारा-दनाहतं स्पृशति ।**
**तस्मा-दाज्ञाचक्रं द्वितीयकूटं तु कोटि-सूर्याभम् ॥ २० ॥**

**வர்ணங்களின் ஸ்திதி, ஸ்தானம், ரூபம், ஆகாரம் ஆகியவற்றின் வர்ணனை**

ப்ரலயாக்னி- நிபம் ப்ரதமம்
மூலாதாரா- தனாஹதம் ஸ்ப்ருசதி ।
தஸ்மா- தாஜ்ஞாசக்ரம் த்விதீய-
கூடம் து கோடி- ஸூர்யாபம் ॥ 20 ॥

20. (ப்ரதமம்) முதல் கூடம் (ப்ரலயாக்னி- நிபம்) பிரளய காலத்து அக்னியைப்போல் பிரகாசிப்பதாய் (மூலாதாராத்) மூலாதாரத்திலிருந்து தொடங்கி (அனு ஹதம்) அனுஹதத்தை (ஸ்ப்ருசதி) எட்டித்தொடுகிறது: (தஸ்மாத்) அங்கிருந்து (ஆஜ்ஞாசக்ரம்) ஆக்ஞாசக்ரம் வரை (த்விதீய கூடம் து) இரண்டாவது கூடம் (கோடி ஸௌர்யாபம்) கோடி சூரியனைப்போல் பிரகாச முடையது.

மூலாதாரம்— முதுகெலும்பினுள் ஸுஷும்னு நாடி யின், அடியில் குதஸ்தானத்திற்கு இரண்டு விரற்கடை மேல் உள்ள நாலிதழ்க்கமலம். ஸ்வாதிஷ்ட்டானம்—லிங் கஸ்தானத்திலுள்ள ஆறிதழ்க்கமலம். மணிபூரகம்—நாபி ஸ்தானத்திலுள்ள பத்திதழ்க்கமலம். அனுஹதம்— இருதயஸ்தானத்திலுள்ள பன்னிரண்டிதழ்க் கமலம். விசுத்தி— கழுத்து ஸ்தானத்திலுள்ள பதினறிதழ்க் கமலம். ஆக்ஞை — புருவமத்தியிலுள்ள இரண்டிதழ்க் கமலம். ஸஹஸ்ராரம்—தலையிலுள்ள ஆயிரமிதழ்க்கமலம்.

तस्मा-ल्ललाटमध्यं तार्तीयं कोटिचन्द्राभम् ।
मालामणिवद्वर्णाः क्रमेण भाव्या उपर्युपरि ॥ २१ ॥

தஸ்மால்· லலாட- மத்த்யம்
தார்த்தீயம் கோடிசந்த்ராபம் ।
மாலாமணிவத் - வர்ணாঃ
க்ரமேண பாவ்யா உபர்யுபரி ॥ 21 ॥

21. (தஸ்மாத்) அங்கிருந்து (லலாடமத்த்யம்) நடு நெற்றிவரை (தார்த்தீயம்) மூன்றுவது கூடம் (கோடி

சந்த்ராபம்) கோடி சந்திரப் பிரகாசமுடையது. மாலா-மணிவத்) மாலையில் மணிகளைப்போல் (வர்ணா:) எழுத்துக்கள் (க்ரமேண) வரிசையாக (உபர்யுபரி) ஒன்றன் மேலொன்ருக (பாவ்யா:) தியானிக்கப்பட வேண்டும்.

பிந்துமுதல் உன்மனி வரையிலுள்ள ஒன்பதைப் பற்றி 22-26 சுலோகங்களில் கூறப்படுகிறது.

**आधारोत्थित - नादो गुण इव परिभाति वर्णमध्यगतः।**
**मध्ये फालं बिन्दु - दीप इवाभाति वर्तुलाकारः ॥ २२ ॥**

ஆதாரோத்தித - நாதோ குண இவ
பரிபாதி வர்ண- மத்த்யகத: ।
மத்த்யே பாலம் பிந்துர் - தீப
இவாபாதி வர்த்துலாகார: ॥ 22 ॥

22. (ஆதார - உத்தித) மூலாதாரத்தில் எழுந்த (நாத:) நாதம் (வர்ண - மத்த்ய - கத:) வர்ணங்களின் மத்தியில் செல்லும் (குண இவ) சரடு போல் (பரிபாதி) பிரகாசிக்கிறது. (மத்த்யே பாலம்) நெற்றியின் நடுவில் (வர்த்துல - ஆகார:) வட்டவடிவாய் (தீப இவ) தீபத்தைப்போல் (பிந்து:) பிந்துவானது (ஆபாதி) பிரகாசிக்கிறது.

நாதம்— ஆலமரத்திற்கு ஆலவிதை காரணமாவது போல் சப்த சிருஷ்டிக்கு ஆதாரமான நாதத்தின் அதி ஸூக்ஷ்ம வடிவமே திரிபுரஸுந்தரியின் 'பரா' ஸ்வரூபம். அந்தப் 'பரா' எனும் ஆதிசக்தியே உலகைச் சிருஷ்டிக்கக் கருதிய பொழுது 'பச்யந்தீ' எனும் பெயரைப் பெற்ருள்

இதினின்று அவிக்ருதம், சூன்யம், ஸ்பர்சம், நாதம், த்வனி, பிந்து, சக்தி, பீஜம், அக்ஷரம் எனும் நவநாதங்கள் உண்டாயின. இவற்றின் ஸமஷ்டியே 'மத்யமா'. இவ்வொன்பது நாதங்களும், ஆறு ஆதாரங்களிலும், நாதம் (ஆக்ஞைக்கு 4 விரற்கடைமேல்), நாதாந்தம் (அதற்கு ஒரு விரற்கடைக்கு மேல்), பிரம்மரந்திரம் (தலை உச்சி) எனும் ஸ்தானங்களிலுமாக, ஒன்பது இடங்களில் விளங்கும். இதனால் அக்ஷர வடிவான 'வைகரீ' வாக்கு உண்டாயிற்று. இத்தகைய நாதம் மணிகளிடை சரடுபோல் அக்ஷரங்களை ஊடுருவி நிற்கின்றது.

**तदुपरि गतोऽर्धचन्द्रो ऽन्वर्थः कान्त्या तथाऽऽकृत्या ।**
**अथ रोधिनी तदूर्ध्वं त्रिकोणरूपा च चन्द्रिका - कान्तिः ॥**

தது பரி கதோऽர்த்தசந்த்ரோऽன்வர்த்தஃ
காந்த்யா ததாऽऽக்ருத்யா ।
அத ரோதினீ ததூர்த்த்வம்
த்ரிகோணரூபா ச சந்த்ரிகா - காந்திஃ ॥ 23 ॥

23. (தத் உபரி கதஃ) அந்த பிந்துவிற்கு மேல் சென்று (காந்த்யா) பிரகாசத்திலும் (ததா) அவ்வாறே (ஆக்ருத்யா) வடிவத்திலும் (அர்த்த - சந்த்ர - அன்வர்த்தஃ) அரைச் சந்திரனைப் பின்பற்றிய ஸ்வரூபம்; (அத) பின்பு (தத் ஊர்த்த்வம்) அதற்கு மேல் (த்ரிகோண ரூபா ச) முக்கோண வடிவானதும் (சந்த்ரிகா காந்திஃ) நிலவுபோன்று பிரகாசிப்பதுமான (ரோதினீ) ரோதினீ.

மந்திரங்களுக்கு யந்த்ரவடிவம் உள்ளவாறு அர்த்த சந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம் முதலிய

ஸூக்ஷ்ம நாதங்களுக்கு 23-26 சுலோகங்களில் வடிவங்கள் கூறப்படுகின்றன.

**नादस्तु पद्मरागव - दण्डद्वयमध्यवर्तिनीव सिरा ।**
**नादान्त-स्तडिताभः सव्यस्थित - बिन्दुयुक्त -**
**लांगलवत् ॥ २४ ॥**

நாதஸ்து பத்மராகவ - தண்ட-
த்வயமத்த்ய- வர்த்தினீவ- ஸிரா ।
நாதாந்தஸ் - தடிதாப: ஸவ்ய-
ஸ்த்தித - பிந்து- யுக்த- லாங்கலவத் ॥ 24 ॥

24. (நாத: து) அதற்கு மேலுள்ள நாதமோ எனின் (பத்மராகவத்) பத்மராகத்தைப் போல் பிரகாசமுடையதாயும் (அண்டத்வய - மத்த்ய - வர்த்தினீ இவ ஸிரா) இரண்டு அண்டங்களுக்கு நடுவில் உள்ள நரம்பு போன்றும் உளது. (நாதாந்த:) நாதாந்தம் (தடித் ஆப:) மின்னலைப் போன்று பிரகாசிப்பதாயும் (ஸவ்யஸ்த்தித) இடது பக்கத்திலிருக்கும் (பிந்து- யுக்த) பிந்துவுடன் கூடின (லாங்கலவத்) கலப்பை போலும் உளது.

**तिर्यग् बिन्दु - द्वितये वामोद्गच्छत् सिराकृतिः शक्तिः ।**
**बिन्दूद्गच्छत् त्र्यश्राकारधरा व्यापिका प्रोक्ता ॥ २५ ॥**

திர்யக்பிந்து- த்விதயே வாமோத்
கச்சத் ஸிராக்ருதி: சக்தி: ।
பிந்தூத்கச்சத் த்ர்யச்ராகாரதரா
வ்யாபிகா ப்ரோக்தா ॥ 25 ॥

25. (திர்யக்- பிந்து- த்விதயே) குறுக்காக இணைந்த இரு பிந்துக்களில் (வாமோத்கச்சத்) இடது பிந்துவிற்கு மேல் செல்லும் (ஸிரா - ஆக்ருதிः) நரம்பு போன்ற வடிவத்துடன் கூடியது (சக்திः) சக்தி என்பது. (பிந்து - உத்கச்சத்) பிந்துவிற்குமேல் அமையும் (த்ர்யச்ர - ஆகாரதரா) முக்கோண வடிவுடையது என (வ்யாபிகா) வியாபிகை (ப்ரோக்தா) கூறப்படுகிறது.

ऊर्ध्वाधो · बिन्दुद्वय - संयुत - रेखाकृतिः समना ।
सैवोर्ध्वबिन्दु · हीनोन्मना तदूर्ध्वं महाबिन्दुः ॥ २६ ॥

ஊர்த்த்வாதோ · பிந்துத்வய -
ஸம்யுத- ரேகாக்ருதிः ஸமனா ।
ஸைவோர்த்த்வபிந்து- ஹீனோன்மனா
ததூர்த்த்வம் மஹாபிந்துः ॥ 26 ॥

26. (ஊர்த்த்வ- அதः) மேலும் கீழும் (பிந்து - த்வய- ஸம்யுத) இரண்டு பிந்துக்களுடன் கூடிய (ரேகா ஆக்ருதிः ) கோட்டின் வடிவமுடையது (ஸமனா) ஸமனை· (ஸா ஏவ) அதுவே ஊர்த்த்வபிந்து- ஹீனா) மேல் பிந்து இல்லாவிட்டால் (உன்மனா) உன்மனி. (தத் ஊர்த்த்வம்) அதற்குமேல் உள்ளது (மஹாபிந்துः) மகாபிந்து எனப் படுவது.

वर्णोच्चारण - प्रकारः

शक्त्यादीनां तु वपु-र्द्वादश - रविकान्ति-पुंजाभम् ।
इत्येवं वर्णानां स्थानं ज्ञात्वोच्चरेद्यत्नात् ॥ २७ ॥

## வர்ணங்களின் உச்சரிப்பு முறை

சக்த்யாதீனும் து வபுர்- த்வாதச-
ரவி- காந்தி- புஞ்ஜாபம் ।
இத்யேவம் வர்ணனும் ஸ்த்தானம்
ஜ்ஞாத்வோச்சரேத் யத்னத் ॥ 27 ॥

27. (சக்தி- ஆதீனும் து) சக்தி முதலியவற்றின் (வபுः) வடிவம் (த்வாதச- ரவி-) பன்னிரண்டு சூரியர்களுடைய (காந்தி- புஞ்ஜாபம்) ஒளித்திரளைப் போன்றது. (இதி ஏவம்) இவ்வாறாக (வர்ணனும்) வர்ணங்களின் (ஸ்த்தானம்) இடத்தை (ஜ்ஞாத்வா) அறிந்து (யத்னத்) பிரயத்னத்துடன் (உச்சரேத்) உச்சரிக்க வேண்டும்.

மானஸ ஜபத்தில் உச்சாரணை இல்லை எனினும் வர்ணங்களின் உற்பத்தி ஸ்தானம், மூலாதாரம் முதலிய ஸ்திதி ஸ்தானம் உச்சரிப்பின் பிரயத்னம் முதலியவை பழக்கப்பட்டுப் போனதால் ஸூக்ஷ்மமாகப் பாவனை செய்ய வேண்டும்.

नादः प्राथमिकस्तु द्वितीयकूटेन साक-मुच्चार्यः ।
द्वैतीयीकं नादं तार्तीयेनोच्चरेन्न पृथक् ॥ २८ ॥

நாதः ப்ராதமிகஸ்து த்விதீய-
கூடேன ஸாக- முச்சார்யः ।
த்வைதீயீகம் நாதம் தார்த்தீயே
நோச்சரேந் ந ப்ருதக் ॥ 28 ॥

28. (ப்ராதமிகஸ்து) முதல் கூடத்தின் (நாதஃ) நாதம் (த்விதீய- கூடேன) இரண்டாவது கூடத்துடன் (ஸாகம்) கூட்டி (உச்சார்யஃ) உச்சரிக்கப்படவேண்டும், (த்வைதீயீகம்) இரண்டாவது கூடத்தின் (நாதம்) நாதம் (தார்த்தீயேன) மூன்றுவதுடன் (உச்சரேத்) உச்சரிக்கப் படவேண்டும். (ந ப்ருதக்) தனித்தனியாய்ப் பிரித்து உச்சரிக்கக் கூடாது.

நாதம்— பிந்து முதல் உன்மனி வரையில் உள்ள ஒன்பது.

बिन्द्वादि-नवकयोस्तु प्राक्तन - कूटस्थयो-रनयोः ।
संमेलनेन शबलं तार्तीयीकं विभावयेत्कूटम् ॥ २९ ॥

பிந்த்வாதி- நவகயோஸ்து ப்ராக்தன-
கூடஸ்த்தயோ- ரனயோஃ।
ஸம்மேலனேன சபலம் தார்த்தீயீகம்
விபாவயேத் கூடம் ‖ 29 ‖

29. (பிந்த்வாதி- நவகயோஃ து) பிந்து முதலிய ஒன்பதின் நாதம் (ப்ராக்தன- கூடஸ்த்தயோஃ) முதல் இரண்டு கூடத்திலும் (அனயோஃ ஸம்மேலனேன) பின் வரும் அக்ஷரங்களுடன் சேர்த்தேயும் (தார்த்தீயீகம் கூடம்) மூன்றுவதுகூடம் (சபலம்) பிரித்தும் ஸ்பஷ்டமாக வும் (விபாவயேத்) பாவித்தல் வேண்டும்.

பூர்வ-பூர்வ - கூடஸ்த்த - நாதஸ்-யோத்தரோத்தர-கூடோச்சாரணேனைவோச்சரித - ப்ராயத்வாந் ந தத்ர பார்த்தக்யேன யத்னஃ கால விலம்போ வா கார்ய இத்

யர்த்தः। த்ருதீய - கூடேதூத்தர - கூடாபாவாத் தது பய-மபேக்ஷிதம் ॥

बिन्द्वादिक - समनान्तं क्रमेण तार्तीय - मुच्चरेन्नादम्।
उन्मन्यन्तर्लीनं विभावये - देतदुच्चरणम् ॥ ३० ॥

பிந்த்வாதிக- ஸமனாந்தம் க்ரமேண
தார்த்தீய- முச்சரேந் நாதம்।
உன்மன்யந்தர்- லீனம் விபாவயே-
தேதத- துச்சரணம் ॥ 30 ॥

30. (பிந்த்வாதிக- ஸமனாந்தம்) பிந்துமுதல் ஸமனை வரை (க்ரமேண) தொடர்பாக (தார்த்தீயம்) மூன்றுவது கூடத்திலுள்ள (நாதம்) நாதமானது (உச்சரேத்) உச்சரிக்கப்பட வேண்டும். (ஏதத் உச்சரணம்) இந்த உச்சாரணம் (உன்மனி) உன்மனியில் (அந்தர்- லீனம்) உள்ளே லயமானதாக (விபாவயேத்) பாவனை செய்யவேண்டும்.

உன்மனிக்கு உச்சாரணகாலம் இன்மையால் ஸமனை அதில் லயமாவதாய் பாவனை மட்டுந்தான் செய்ய முடியும்.

वर्णोच्चारणकाल - निष्कर्षः

आद्ये दश मध्ये ताः सार्धास्तार्तीय - कूटेऽष्टौ।
एकलवोना ऊनत्रिंशन्मात्रा मनोर्जपे कालः ॥ ३१ ॥

## வர்ணங்களை உச்சரிக்கும் கால நிர்ணயம்

ஆத்யே தச மத்த்யே தாঃ ஸார்த்தாஸ்-
தார்த்தீய- கூடேऽஷ்டௌ ।
ஏக- லவோனா ஊன- த்ரிம்சன்-
மாத்ரா மனோர்- ஜபே காலঃ ॥ 31 ॥

31. (ஆத்யே) முதல் கூடத்தில் (தச) பத்து மாத்திரை; (மத்த்யே) மத்திய கூடத்தில் (தாঃ ஸார்த்தாঃ) அரை மாத்திரை கூடிய அதுவே அதாவது பத்தரை மாத்திரை; (தார்த்தீய கூடே) மூன்றாவது கூடத்தில் (ஸார்த்தா அஷ்டௌ ஏகலவோனா) ஒரு லவம் குறைய எட்டரை மாத்திரை;—ஆக- (மனோঃ ஜபே) மந்திர ஜபத்தில் (காலঃ) காலம் (ஊன- த்ரிம்சன்- மாத்ரா) ஒரு லவம் குறைய இருபத்தொன்பது மாத்திரை.

ஸார்த்தাঃ—பூர்வ - பரவர்த்தி பதத்வயம் காகாக்ஷி-ந்யாயேன த்விர்த்வி - ரன்வயிதவ்யம் । ஜபே—வாசிகே ந து மானஸே. மானஸ ஜபத்தில் கால நிபந்தனை இல்லை.

கூடங்களைத் தனித்தனியாக உச்சரித்தால் மொத்தம் 31 மாத்திரை. ஜபத்தில் தொடர்ந்து உச்சரிப்பதால் 29 மாத்திரை.

## व्यष्टि - समष्टिभेदेन चतुर्धा - भिन्नानां कूटानां स्वरूपविशेषण-वर्णनम्

व्यष्टि - समष्टि - विभेदा · दस्यां चत्वारि बीजानि ।
सृष्टि-स्थिति-संहारा-नाख्या-रूपाणि भावनीयानि ॥३२॥

## வ்யஷ்டி ஸமஷ்டி பேதத்தால் நான்குவித ஸ்வரூப விசேஷம்

வ்யஷ்டி- ஸமஷ்டி- விபேதா-
தஸ்யாம் சத்வாரி பீஜானி ।
ஸ்ருஷ்டி- ஸ்த்திதி- ஸம்ஹாரா- ஞக்க்யா
ரூபாணி பாவனீயானி ॥ 32 ॥

32. (வ்யஷ்டி- ஸமஷ்டி- விபேதாத்) தனித்தனியாகவும் ஒன்று கூட்டியும் நோக்கும் பேதத்தால் (அஸ்யாம்) இம் மந்திரத்திற்கு (சத்வாரி) நான்கு (பீஜானி) பீஜங்கள். (ஸ்ருஷ்டி) சிருஷ்டி (ஸ்திதி) ஸ்திதி (ஸம்ஹார) அழிவு (அஞக்க்யா) உதாஸீனம் அல்லது திரோதானமும் அனுக்கிரஹமும் என்ற (ரூபாணி)- நான்கு-ரூபங்களாக (பாவனீயானி) பாவிக்கப்பட வேண்டியவை.

மூன்று கூடங்களும் தனித்தனியாக மூன்று பீஜங்கள். ஒன்று கூட்டி ஒரு பீஜம்; ஆக நான்கு பீஜங்கள். அவற்றை சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் அநாக்கியை என பாவிக்க வேண்டும். இது மேலே விளக்கப்படும்.

पुट - धाम - तत्त्व - पीठान्वय - लिंगक-मातृ-तत्समष्टीनाम् ।
रूपान्तराणि बीजान्यमूनि चत्वारि चिन्तनीयानि ॥ ३३ ॥

புட - தாம - தத்வ - பீடான்வய - லிங்கக-
மாத்ரு - தத் - ஸமஷ்டீனாம் ।
ரூபாந்தராணி பீஜான்யமூனி
சத்வாரி சிந்தனீயானி ॥ 33 ॥

33. (புட) த்ரிபுடீ என்ற புடங்கள், (தாம) தாமங்கள் (தத்வ) தத்துவங்கள் (பீட) பீடங்கள் (அன்வய) அன்வயங்கள் (லிங்க) லிங்கங்கள் (மாத்ரு) மாத்ருகைகள் ஆகியவற்றிற்கும் (தத் ஸமஷ்டீனாம்) அவற்றின் தொகுதியான ஸமஷ்டி வடிவங்களுக்கும் (ரூபாந்தராணி) ரூபாந்தரங்களாக (அமூனி சத்வாரி பீஜானி) இந்நான்கு பீஜங்களும் (சிந்தனீயானி) சிந்திக்கப்படவேண்டும்.

புடங்கள்— வியஷ்டியில் ஞாத்ரு, ஞானம், ஞேயம், (மூன்று கூடம் தனித்தனியாக) ஸமஷ்டியில் த்ரிபுடி (மூன்று கூடமும் சேர்த்து)

தாமங்கள்— ஏழுவகை (i) சக்ரங்கள்— வியஷ்டியில் அக்னிசக்ரம், ஸூரியசக்ரம், ஸோமசக்ரம்; ஸமஷ்டியில் பிரஹ்மசக்ரம் (ii) நாதர்கள்— வியஷ்டியில் மித்ரேச நாதர், ஷஷ்டீசநாதர், உட்டீசநாதர்; ஸமஷ்டியில் சர்யாநந்த நாதர், (iii) தசைகள்— வியஷ்டியில் ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி; ஸமஷ்டியில் துரீயம். (iv) சக்திகள்— வியஷ்டியில் வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரி, ஸமஷ்டியில் சாந்தா. (v) வியஷ்டியில் இச்சா சக்தி, க்ரியாசக்தி, ஞானசக்தி; ஸமஷ்டியில் அம்பிகை (vi) வியஷ்டியில் காமேச்வரீ, வஜ்ரேச்வரி, பகமாலினி; ஸமஷ்டியில் மஹாத்ரிபுரஸுந்தரீ. (vii) ஆத்மா— வியஷ்டியில் ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா; ஸமஷ்டியில் ஞானாத்மா.

தத்துவங்கள்— வியஷ்டியில் ஆத்ம தத்துவம், வித்யா தத்துவம், சிவ தத்துவம்; ஸமஷ்டியில் ஸர்வ தத்துவம்.

பீடங்கள்— வியஷ்டியில் காமகிரிபீடம், பூர்ணகிரி பீடம், ஜாலந்தரபீடம்; ஸமஷ்டியில் ஓட்யாண பீடம்.

அன்வயங்கள் அல்லது ஆம்ஞயங்கள்— வியஷ்டியில் பூர்வாம்ஞயம், தக்ஷிணாம்ஞயம், பச்சிமாம்ஞயம்; ஸமஷ்டியில் உத்தராம்ஞயம்.

லிங்கங்கள்— வியஷ்டியில் சுயம்பு லிங்கம், பாண லிங்கம், இதர லிங்கம்; ஸமஷ்டியில் பரலிங்கம்.

மாத்ருகை— வியஷ்டியில் பச்யந்தீ, மத்யமா, வைகரீ; ஸமஷ்டியில் பரா.

प्रत्यक्षरं स्वरूपोक्तिः

**एकैकस्मिन् कर्मणि सृष्टयादि - विभेदत - स्त्रिविधे ।**
**ब्रह्माद्या अधिपतयो भारत्यादि स्वशक्तिभिः सहिताः ॥३४॥**

ஒவ்வொரு அக்ஷரத்தின் ஸ்வரூப விளக்கம்

*ஏகைகஸ்மின் கர்மணி ஸ்ருஷ்ட்யாதி-*
*விபேததஸ் - த்ரிவிதே ।*
*ப்ரஹ்மாத்யா அதிபதயோ*
*பாரத்யாதி ஸ்வசக்திபிঃ ஸஹிதாঃ । 34 ॥*

34. (ஏகைகஸ்மின் கர்மணி) சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற ஒவ்வொரு கர்மாவிலும் (ஸ்ருஷ்ட்யாதி) சிருஷ்டி முதலிய (விபேததঃ) வேற்றுமையால் (த்ரிவிதே) மூன்று விதங்களிருப்பதால் (பாரத்யாதி) ஸரஸ்வதி முதலிய (ஸ்வசக்திபிঃ ஸஹிதாঃ) தத்தம் சக்திகளுடன் கூடிய

(ப்ரஹ்மாத்யாஃ) பிரம்மா முதலியவர்கள் (அதிபதயஃ) அதிபதிகள் ஆவர்.

ஒவ்வொரு கர்மாவிலும் மூன்று விதம்— சிருஷ்டியில் சிருஷ்டி, சிருஷ்டியில் ஸ்திதி, சிருஷ்டியில் ஸம்ஹாரம்; அவ்வாறே ஸ்திதியில் சிருஷ்டி, ஸ்திதியில் ஸ்திதி, ஸ்திதியில் ஸம்ஹாரம்; ஸம்ஹாரத்தில் சிருஷ்டி, ஸம்ஹாரத்தில் ஸ்திதி, ஸம்ஹாரத்தில் ஸம்ஹாரம்.

**ब्रह्मादय-स्त्रयोऽमी भारत्याद्याश्च शक्तयस्तिस्रः ।**
**प्रत्यक्षरस्वरूपाः शाक्तार्थे वक्ष्यमाणया रीत्या ॥ ३५ ॥**

*ப்ரஹ்மாதயஸ்- த்ரயோऽமீ பாரத்யாத்-*
*யாச்ச சக்தயஸ்- திஸ்ரஃ ।*
*ப்ரத்யக்ஷர- ஸ்வரூபாஃ சாக்தார்த்தே*
*வக்ஷ்யமாணயா ரீத்யா ॥ 35 ॥*

35. (அமீ) இந்த (ப்ரஹ்மாதயஃ த்ரயஃ) பிரம்மா முதலிய மூவரும் (பாரத்யாத்யாஃ ச) ஸரஸ்வதி முதலிய (சக்தயஃ திஸ்ரஃ) சக்திகள் மூவரும் (ப்ரத்யக்ஷர- ஸ்வரூபாஃ) தனித்தனி அக்ஷரத்தின் ஸ்வரூபம் உடையவர்களாவர் — (சாக்தார்த்தே) சாக்தார்த்தம் விளக்கப்படுமிடத்தில் (வக்ஷ்யமாணயா ரீத்யா) இனி கூறப்படப் போகும் முறையில்.

சாக்தார்த்தம்— சுலோகம் 61-65.

தனித்தனி அக்ஷரத்தின் ஸ்வரூபம்— முதல் கூடத்தில் க-பிரம்மா, ஏ-ஸரஸ்வதி; ஈ-விஷ்ணு; ல-லக்ஷ்மி; ஹ்-ருத்ரன், ர்-ருத்ராணி; ஈ-சாந்தாம்பிகை. இரண்டாவது கூடத்தில் இரண்டாவது ஹகாரத்தை நீக்கி முதல் ஹ-பிரம்மா; ஸ-ஸரஸ்வதி; க-விஷ்ணு, ல-லக்ஷ்மி; ஹ்-ருத்

3

ரன்; ர்-ருத்ராணி; ஈ-சாந்தாம்பிகை. மூன்ருவது கூடத்தில் இரண்டாவதில் நீக்கிய ஹகாரத்தைச் சேர்த்து ஹ-பிரம்மா, ஸ-ஸரஸ்வதி; க-விஷ்ணு, ல-லக்ஷ்மி; ஹ்-ருத்ரன், ர்-ருத்ராணி, ஈ-சாந்தாம்பிகை. மூன்ருவது சக்தி கூடமாதலால் ஸகாரத்தில் துவக்கம்.

बिन्द्वादीनां स्वरूपोक्तिः

**हृल्लेखा - कामकला - सपरार्धकलाख्य - कुण्डलिन्युत्थाः ।**
**नादाश्चक्र - त्रितय - त्रितयात्मानो विभावनीयाः स्युः ॥**

பிந்து முதலியவற்றின் ஸ்வரூபம்

ஹ்ருல்லேகா - காமகலா ஸபரார்த்த -
கலாக்ய - குண்டலின்யுத்தாः ।
நாதாச்சக்ர - த்ரிதய - த்ரிதயாத்மானோ
விபாவனீயாः ஸ்யுः ॥ 36

36. (ஹ்ருல்லேகா) ஹ்ரீங்காரங்களில் (காமகலா) காமகலை எனப்படும் 'ஈ' என்பதுடன் கூடிய (ஸபரார்த்தகலா - ஆக்க்ய) ஸபரார்த்த கலை என்னும் (குண்டலினீ - உத்தாः) குண்டலினிகளில் இருந்து எழுகின்ற (நாதாः) மூன்று காமகலைகளிலுள்ள மூன்று நாதங்களும் (சக்ர - த்ரிதய - த்ரிதய - ஆத்மானः) மும்மூன்று சக்ரங்களுக்கு உயிர் ஸ்தானமாய் (விபாவனீயாः) பாவிக்கத்தக்கவைகளாக (ஸ்யுः) விளங்குகின்றன.

விபாவனீயாः — விபாவ்யாः — பாடபேதம்.

ஸபரார்த்தகலா— 'ஸ- பரா' என்ருல் 'ஸ'வுக்குப் பின் வரும் 'ஹ' என்னும் எழுத்து; அதின் வடிவம் விஸர்க்கம் அல்லது இரண்டு பிந்து; 'அர்த்தகலா'

என்றால் அதில் பாதி அதாவது ஒரு பிந்து. பிந்துவே 'ஸபரார்த்தகலா' என்ற ஸங்கேத நாமத்தால் குறிக்கப் படுவது.

குண்டலினீ— பிந்து கலை முதல் கூடத்தில் 'அக்னி-குண்டலினீ' என்றும், இரண்டாவது கூடத்தில் 'ஸௌர்ய குண்டலினீ என்றும் மூன்றாவது கூடத்தில் 'ஸோம குண்டலினீ என்றும் பெயர்பெறும். மூலாதாரம் முதல் அநாஹதம் வரை வியாபிக்கும் முதல் கூடத்தின் நாதமாகிய அக்னிகுண்டலினீ அநாஹதத்திற்கு மேல் ஆக்ஞை வரையில் அக்னிசிகையைப்போல் வியாபித்து த்ரைலோக்யமோஹனம், ஸர்வாசா பரிபூரகம், ஸர்வ ஸம்க்ஷோபணம் என்னும் மூன்று சிருஷ்டி சக்கரங்களுக்கு உயிர் ஸ்தானமாயிருக்கிறது. அநாஹதம் முதல் ஆக்ஞை வரை வியாபிக்கும் இரண்டாவது கூடத்தின் நாதமாகிய ஸௌர்ய குண்டலினீ ஆக்ஞைக்கு மேல் பிந்து ஸ்தானம் வரை வியாபித்து ஸர்வ ஸௌபாக்யதாயகம், ஸர்வார்த்தஸாதகம், ஸர்வரக்ஷாகரம் என்னும் மூன்று ஸ்திதி சக்கரங்களுக்கு உயிர் ஸ்தானமாயிருக்கிறது. ஆக்ஞை முதல் தலை உச்சிவரை வியாபிக்கும் மூன்றாவது கூடத்தின் நாதமாகிய ஸோமகுண்டலினி பிந்து ஸ்தானத்திலிருந்து துவாதசாந்தம் வரை வியாபித்து ஸர்வரோகஹரம், ஸர்வஸித்திப்ரதம், ஸர்வானந்தமயம் என்னும் ஸம்ஹார சக்கரங்களுக்கு உயிர் ஸ்தானமாயிருக்கிறது.

## अवस्था · पंचकम्

इन्द्रियदशक - व्यवहृतिरूपा या जागरावस्था ।
तत्र प्रकाशरूपो हेतु - र्भाव्य - स्तृतीयगे रेफे ॥ ३७ ॥

## ஐந்து அவஸ்தைகள்

இந்த்ரியதசக - வ்யவஹ்ருதிரூபா
யா ஜாகராவஸ்த்தா ।
தத்ர ப்ரகாசரூபோ ஹேதுர் - பாவ்ய -
ஸ்த்ருதீயகே ரேபே ॥ 37 ॥

37. (இந்த்ரியதசக) பத்து இந்திரியங்களின் (வ்யவஹ்ருதி - ரூபா) செயல் வடிவான நிலை (யா) எதுவோ- அது (ஜாக்ராவஸ்த்தா) விழிப்பு நிலை. (தத்ர) அங்கு (ப்ரகாசரூபோ ஹேதுः) பிரகாச வடிவான காரணம் என்று (த்ருதீயகே) மூன்றுவது கூடத்திலுள்ள (ரேபே) ரகாரத்தில் — ஆக்ஞையில் (பாவ்ய) பாவனை செய்ய வேண்டும்.

பத்து இந்திரியங்கள்— ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து.

अन्तःकरण - चतुष्क - व्यवहारः स्वाप्निकावस्था ।
सा तार्तीयेकाराद्बोध्याऽपि गलस्थले चिन्त्या ॥ ३८ ॥

அந்தஃகரண - சதுஷ்க - வ்யவஹாரஃ
ஸ்வாப்னிகாவஸ்த்தா ।
ஸா தார்த்தீயேகாராத் போத்த்யாऽபி
கலஸ்த்தலே சிந்த்யா ॥ 38 ॥

38. (அந்தஃ கரண-சதுஷ்க) நால்வகைப்பட்ட அந்தக் கரணத்தின் (வ்யவஹாரஃ) விவகாரம் மட்டும் உள்ள நிலை (ஸ்வாப்னிகாவஸ்த்தா) கனவு நிலை. (ஸா) அது (தார்த்தீய-ஈகாராத்) மூன்றுவது கூடத்திலுள்ள ஈகாரத்

தில் (போத்த்யாஅபி) உணரத்தக்கதாயினும். (கலஸ்த் தலே) கழுத்து ஸ்தானத்தில் (சிந்த்யா) சிந்திக்கப்பட வேண்டும்.

அந்தக்கரணம்— மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என நான்கு வடிவானது.

கலஸ்த்தலே— கலஸ்த்தச்ச அஸௌ லச்ச இதி விக்ரஹ꞉। அதாவது கழுத்தில் இருப்பதாகவும் இரண்டாவது கூடத்திலுள்ள லகாரத்தில் இருப்பதாகவும் பாவனை செய்ய வேண்டும்.

आन्तरवृत्तेर्लयतो लीनप्रायस्य जीवस्य ।
वेदनमेव सुषुप्तिश्चिन्त्या तार्तीय - बिन्दौ सा ॥ ३९ ॥

ஆந்தரவ்ருத்தேர்- லயதோ
லீனப்ராயஸ்ய ஜீவஸ்ய ।
வேதனமேவ ஸுஷுப்திச்-சிந்த்யா
தார்த்தீய- பிந்தௌ ஸா ॥ 39 ॥

39. (ஆந்தரவ்ருத்தே꞉) அந்தக்கரண விருத்தியின் (லயத꞉) லயத்தினால் (லீனப்ராயஸ்ய) இறந்தவனுக்கொப்பான (ஜீவஸ்ய) ஜீவனுடைய (வேதனம் ஏவ) அறிவே (ஸுஷுப்தி꞉) ஸுஷுப்தி அல்லது உறக்கம். (ஸா) அது (தார்த்தீய-பிந்தௌ) மூன்றாவது கூடத்திலுள்ள பிந்துவில்—ஆக்ஞைக்கு ஒரு விரற்கடைமேல்— (சிந்த்யா) பாவனை செய்யப் படவேண்டும்.

லீனப்ராயஸ்ய — 'விவரணமதே ஆத்ம- ஸுக- அஜ்ஞான- விஷயகாஸ்- திஸ்ரோ அவித்யா- வ்ருத்தய꞉'— விவரண மதத்தில் ஆத்மவிருத்தி, சுகாகார விருத்தி, அக்

ஞான விருத்தி என மூன்று அவித்யா விருத்திகள் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. 'வார்த்திகமதே வ்ருத்தி ஸாமான்யாபாவ ஏவ ஸுஷுப்திঃ' — வார்த்திக மதத்தில் விருத்தியின்மையே ஸுஷுப்தி.

तुर्यावस्था चिदभिव्यंजक - नादस्य वेदनं प्रोक्तम् ।
तद्भावनाऽर्धचन्द्रादिकं त्रयं व्याप्य कर्तव्या ॥ ४० ॥

துர்யாவஸ்த்தா சிதபிவ்யஞ்ஜக-
நாதஸ்ய வேதனம் ப்ரோக்தம் ।
தத்பாவனாऽர்த்த- சந்த்ராதிகம் த்ரயம்
வ்யாப்ய கர்த்தவ்யா ॥ 40 ॥

40. (சித் - அபிவ்யஞ்ஜக-) ஞானத்தை வெளிப்படுத்தும் (நாதஸ்ய) நாதத்தின் (வேதனம்) அறிவே (துர்யாவஸ்த்தா) துரீய நிலை என்று (ப்ரோக்தம்) கூறப்படுகிறது. (அர்த்த- சந்த்ராதிகம்) அர்த்த சந்திரன் முதலிய (த்ரயம்) மூன்றையும் (வ்யாப்ய) வியாபித்திருப்பதாக (தத்) அதை (பாவனா) பாவனை (கர்த்தவ்யா) செய்யவேண்டும்.

அர்த்த சந்த்ராதிகம் த்ரயம் — அர்த்த சந்திரன், ரோதினி, நாதம் என்ற மூன்றும் பிந்துவிற்கு ஒரு ஒரு விரற்கடை மேல்.

आनन्दैकघनत्वं यद्वाचामपि न गोचरो नृणाम् ।
तुर्यातीताऽवस्था सा नादान्तादि-पंचके भाव्या ॥४१॥

ஆனந்தைக- கனத்வம் யத்- வாசாமபி
ந கோசரோ ந்ருணாம் ।
துர்யாதீதாऽவஸ்த்தா ஸா
நாதாந்தாதி- பஞ்சகே பாவ்யா ॥ 41 ॥

41. (ஆனந்த- ஏக- கனத்வம்) ஆனந்தம் ஒன்றே பரிபூர்ணமாகியதும் (வாசாம் அபி) வாக்கிற்கும் (நரு ணும்) மனிதர்களுக்கு (ந கோசரஃ) எட்டாததாயும் (யத்) உள்ளது எதுவோ (ஸா) அந்த (துர்யாதீத- அவஸ்த்தா) துரீயாதீத நிலை (நாதாந்தாதி- பஞ்சகே) நாதாந்தம் முதலிய ஐந்தில் (பாவ்யா) பாவிக்கத்தக்கது.

நாதாந்தாதி- பஞ்சகே — நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனே, உன்மனி ஆகிய ஐந்து ஸ்தானங்களில், நெற்றியில் ஒன்றிற்கொன்று ஒரு விரற்கடை மேலாக.

## शून्यषट्क - निरूपणम्

तार्तीयीके रेफस्थाने बिन्दौ च रोधिन्याम् ।
नादान्त - व्यापिकयोश्चन्द्रक - तुल्यानि पंच शून्यानि ॥

## சூன்யஷட்க- நிரூபணம்

தார்த்தீயீகே ரேபஸ்த்தானே
பிந்தௌ ச ரோதின்யாம் ।
நாதாந்த- வ்யாபிகயோச்சந்த்ரக-
துல்யானி பஞ்ச சூன்யானி ॥ 42 ॥

42. (தார்த்தீயீகே) மூன்றுவது கூடத்தில் (ரேபஸ்த்தானே) ரகாரத்திலும் (பிந்தௌ ச) பிந்துவிலும் (ரோதின்யாம்) ரோதினியிலும் (நாதாந்த- வ்யாபிகயோஃ) நாதாந்தத்திலும் வியாபிகையிலும் (சந்த்ரக- துல்யானி) மயில் தோகையின் கண்களுக்கு நிகரான (பஞ்ச) ஐந்து (சூன்யானி) சூனியங்களை — பாவிக்க வேண்டும்.

சூன்யானி — ஓ. 'சிகிபக்ஷ- சித்ரரூபைர்- மண்டலை:
சூன்ய- பஞ்சகம் । த்யாயதோऽனுத்தரே சூன்யம் பரம்
வ்யோம தனுர்ப்பவேத் ॥' மயில் இறகிலுள்ள விசித்திர
மான மண்டல வடிவில் ஐந்து சூனியங்களைத் தியானிப்ப
வனுக்குப் பரமாகாச வடிவான அடுத்த சூன்யம்
விளங்கும். — ஸ்வச்சந்த ஸங்க்ரஹம்.

ஓ. நஷ்டே பூர்வ விகல்பே து யாவதன்யஸ்ய நோதய: ।
நிர்விகல்பக- சைதன்யம் ஸ்பஷ்டம் தாவத்
விபாஸதே ॥ லகு வாக்யவ்ருத்தி— ஸ்ரீ சங்கராசாரியர்

நிர்விகல்பக சைதன்யம் என்பதுதான் சூனியம்
என்று இங்கு கூறப்படுவது.

उन्मन्यां नीरूपं षष्ठं चिन्त्यं महाशून्यम् ॥

உன்மன்யாம் நீரூபம் ஷஷ்டம்
சிந்த்யம் மஹாசூன்யம் । 42½ ॥

42½. (உன்மன்யாம்) உன்மனியில் (நீரூபம்) உருவ
மற்ற (ஷஷ்டம்) ஆறுவதான (மஹாசூன்யம்) பெரிய
சூனியம் (சிந்த்யம்) சிந்திக்கப்பட வேண்டும்.

ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி, துரீயம், துரீயா
தீதம் என்னும் ஐந்து அவஸ்தைகளுக்கும் ஒவ்வொன்
றின் முன்னும் பின்னுமாக ஆறு சூன்யங்கள் உண்டு.
முதல் ஐந்தும் அவஸ்தைகளுக்குட்பட்டவை. துரீயா
தீதத்திற்கு மேல் உன்மனி ஸ்தானத்தில் விளங்கும்
மஹா சூன்யத்தில் எந்த வகையான விருத்தியும் கிடை
யாது. துரீயத்தில் அறிவு வடிவ விருத்தியுண்டு. துரீயா

தீதத்தில் பரிபூர்ண ஆனந்தகன அகண்டாகார விருத்தி யுண்டு. மகாசூன்யம் அகண்டாகார விருத்தியும் ஒழிந்த ஸஹஜ நிலே. ஐந்து சூனியங்களும் கூடஸ்தனுடைய ஸ்வப்பிரகாசத்தினுல் விளங்குகின்றன.

सप्तविषुवनिरूपणम्

प्राणात्म - मानसानां संयोगः प्राणविषुवाख्यः ॥ ४३ ॥

प्राथमिककूट - नादे त्वनाहताद् ब्रह्मरन्ध्रान्ते ।

व्यष्टि - समष्टिविभेदा - द्बीज - चतुष्कस्य च स्वस्य ॥

ऐक्येन नादमयता-विभावनं मन्त्रविषुवाख्यम् ।

ஸப்த- விஷுவ- நிருபணம்

ப்ராணுத்ம- மானஸாணும் ஸம்யோகঃ
பராணவிஷுவாக்க்யঃ ॥ 43 ॥

ப்ராதமிககூட- நாதே த்வனுஹதாத்
ப்ரஹ்மரந்த்ராந்தே ।
வ்யஷ்டி- ஸமஷ்டி- விபேதாத்-
பீஜ- சதுஷ்கஸ்ய ச ஸ்வஸ்ய ॥ 44 ॥

ஐக்யேந நாதமயதா- விபாவனம்
மந்த்ர- விஷுவாக்க்யம் । 44½

43. (ப்ராண - ஆத்ம - மானஸாணும்) பிராணன், மனம், ஆத்மா அல்லது புத்தி ஆகியவற்றின் (ஸம் யோகঃ) சேர்க்கையே (ப்ராண விஷு - வாக்க்யঃ) ப்ராண விஷுவம் எனப்படும்.

44 - 45. (ப்ராதமிக கூட நாதே து) முதல் கூடத்தின் இறுதியிலுள்ள நாதத்தில் (அஹதாத் ப்ரஹ்ம ரந்த்ராந்தே) அஹதத்தி லிருந்து பிரம்ம ரந்திரம் வரையில் வியாபித்துள்ள - இரண்டாவது மூன்றுவது கூடங்களின் - (வ்யஷ்டி - ஸமஷ்டி விபேதாத்) வியஷ்டி ஸமஷ்டி என்னும் இரண்டு வேற்றுமையால் (பீஜ சதுஷ்கஸ்ய) நான்காயுள்ள பீஜங்களின் நாதத்தையும் (ஸ்வஸ்ய ச) தனது மூலாதாரத்தினின்று கிளம்பும் நாதத்தையும் (ஐக்யேன) ஒன்று படுத்திய (நாதமயதா - விபாவனம்) நாதமாய் பாவித்தல் (மந்த்ர விஷுவாக்யம்) மந்த்ர விஷுவம் எனப்படும்.

விஷுவம் : உத்தராயணத்தின் மத்திய காலத்தில் சித்திரை மாதம் இரவும் பகலும் சமமாயிருக்கும் போது மேஷ ராசியில் சூரியன் பிரவேசிப்பது சித்திரை விஷு எனப்படும். தக்ஷிணாயனத்தின் மத்திய காலத்தில் ஐப்பசி மாதம் இரவும் பகலும் சமமாயிருக்கும் போது துலா ராசியில் சூரியன் பிரவேசிப்பது துலா விஷு எனப்படும். விஷுவத்தில் சம பரிமாணமுள்ள இரண்டிற்கு மூன்றுவது வஸ்துவுடன் சம்பந்தம் ஏற்படுகிறது.

பிராணவாயுவால் குண்டலினி மூலாதாரத்திலிருந்து எழும்பொழுது நாதம் உண்டாகிறது. இந்த நாதத்தை மனத்தோடும் புத்தியோடும் சேர்த்து அபேதமாய்ப் பாவித்தல் பிராண விஷுவம் ஆகும்.

முதல் கூடத்தின் நாதத்தையும் மந்திரத்தின் இரண்டாவது மூன்றுவது கூட அக்ஷரங்களின் வியஷ்டி ஸமஷ்டி நாதத்தையும் தனது மூலாதாரத்திலிருந்து கிளம்பிய நாதத்துடன் ஐக்கியப் படுத்துதல் மந்த்ர விஷுவமாகும்.

आधारोत्थित - नादस्योच्चाराद् ब्रह्मरन्ध्रान्तम् ॥ ४५ ॥
षट्चक्राणां ग्रन्थीन् द्वादश भिन्दन्सुषुम्णयैव पथा ।
नाडी - नादार्णानां संयोगो नाडिकाविषुवम् ॥ ४६ ॥

ஆதாரோத்தித நாதஸ்யோச்சாராத்
ப்ரஹ்மரந்த்ராந்தம் ॥ 45 ॥
ஷட்சக்ராணும் க்ரந்தீன் த்வாதச
பிந்தன் ஸுஷும்ணயைவ பதா ।
நாடீ நாதார்ணும் ஸம்யோகோ
நாடிகா- விஷுவம் ॥ 46 ॥

45-46. (ஆதார- உத்தித) மூலாதாரத்திலிருந்து எழுந்த (நாதஸ்ய) நாதத்தின் (ப்ரஹ்மரந்த்ராந்தம் உச்சாராத்) பிரம்மரந்திரம் வரை செல்லும் இயல்பால், (ஷட்சக்ராணும்) ஆறு சக்ரங்களின் (க்ரந்தீன் த்வாதச) கீழும் மேலும் உள்ள பன்னிரண்டு கிரந்திகளையும் (பிந்தன்) பிளந்துகொண்டு (ஸுஷும்ணயைவ பதா) ஸுஷும்ஞ மார்க்கத்தாலேயே—அது செல்லும் இயல்பால் — (நாடீ- நாதார்ணும்) ஸுஷும்ஞ நாடியுடன் மூலாதாரத்தில் எழுந்த நாதத்திற்கும் மந்திரத்தின் அக்ஷரங்களுக்கும் (ஸம்யோகஃ) ஏற்படும் ஐக்கியம் (நாடிகா விஷுவம்) நாடீ விஷுவம் எனப்படும்.

रेफे कामकलार्णे हार्दकलायां च बिन्द्वादौ ।
नादान्तावधि नादः सूक्ष्मतरो जायते तत्र ॥ ४७ ॥
शक्ते - र्मध्ये तल्लयचिन्तन - मुदितं प्रशान्तविषुवाख्यम् ।

ரேபே காமகலார்ணே ஹார்த்த-
கலாயாஞ்ச பிந்த்வாதௌ ।
நாதாந்தாவதி நாதஃ ஸூக்ஷ்மதரோ
ஜாயதே தத்ர ॥ 47 ॥
சக்தேர் மத்த்யே தல்லயசிந்தன-
முதிதம் ப்ரசாந்த- விஷுவாக்க்யம் ॥ 47½ ॥

*47-48. (ரேபே) ரகாரத்திலும் (காமகலார்ணே) ஈகாரத்திலும் (ஹார்த்த- கலாயாஞ்ச) பிந்துவாகிய மகாரத்திலும் (பிந்த்வாதௌ) பிந்து முதல் (நாதாந்த- அவதி)— அர்த்தசந்திரன், ரோதினி, நாதம்—நாதாந்தம் வரையிலும் உள்ள (நாதஃ)—மூலாதாரத்திலிருந்து எழுந்த நாதம் (தத்ர) அங்கு (ஸூக்ஷ்மதரஃ) மிகவும் ஸூக்ஷ்மமாக (ஜாயதே) ஆகிறது. (சக்தேஃ மத்த்யே) சக்தியின் மத்தியில் (தத் லயசிந்தனம் உதிதம்) அது லயமாவதாய் பாவித்தல் (ப்ரசாந்த - விஷுவாக்க்யம்) ப்ரசாந்த விஷுவம் என்பதாகக் கூறப்படுகிறது.*

*மூலாதாரத்திலெழுந்த நாதம், சக்தி, நாதலயத்தால் ஏற்படும் சாந்தி ஆகிய மூன்றின் ஐக்கியம் பிரசாந்த விஷுவம்.*

**शक्त्यन्तर्गत - नादं समनायां भावयेल्लीनम् ॥ ४८ ॥**
**समनागत-मुन्मन्यां एते द्वे शक्तिकाल विषुवाख्ये ।**

சக்த்யந்தர்க்கத- நாதம் ஸமனாயாம்
பாவயேல்லீனம் ॥ 48 ॥
ஸமனாகத- முன்மன்யாம் ஏதே
த்வே சக்தி- கால- விஷுவாக்க்யே ॥ 48½ ॥

48-49. (சக்த்யந்தர்க்கத- நாதம்) சக்திக்குள் ஒடுங்கிய நாதம் (ஸமனுயாம்)—வியாபிகையைக் கடந்து-ஸமனையில் (லீனம்) லயமடைந்ததாகவும் (ஸமனுகதம்) ஸமனையில் ஒடுங்கியது (உன்மன்யாம்) உன்மனியில் லயமடைந்ததாகவும் (பாவயேத்) பாவிக்க வேண்டும். (ஏதே த்வே) இவ்விரண்டும் (சக்தி- கால- விஷுவாக்க்யே) சக்திவிஷுவம் என்றும், காலவிஷுவம் என்றும் கூறப்படும்.

श्रीविद्याकूटावयवेषु ककारादिषून्मनान्तेषु ॥ ४९ ॥

अकुलादिकोन्मनान्त - प्रदेशसंस्थेषु सकलेषु ।
अध्युष्ट - निमेषोत्तर - सप्तदशाधिक - शतत्रयत्रुटिभिः ॥

उच्चरिते नादे सति तस्यान्ते तत्त्ववेदनं भवति ।
तदिदं चैतन्याभिव्यक्ति - निदानं तु तत्त्वविषुवाख्यम् ॥

ஸ்ரீவித்யாகூடாவயவேஷு
ககாராதிஷூன்மனாந்தேஷு ॥ 49 ॥

அகுலாதிகோன்மனாந்த- ப்ரதேச-
ஸம்ஸ்த்தேஷு ஸகலேஷு ।
அத்த்யுஷ்ட- நிமேஷோத்தர-
ஸப்ததசாதிக- சதத்ரயத்ருடிபி: ॥ 50 ॥

உச்சரிதே நாதே ஸதி தஸ்யாந்தே
தத்வ- வேதனம் பவதி ।
ததிதம் சைதன்யாபிவ்யக்தி-
நிதானம் து தத்வ- விஷுவாக்க்யம் ॥ 51 ॥

49-51. (ஸ்ரீவித்யா கூட- அவயவேஷு) ஸ்ரீவித்யா மந்திரத்தின் மூன்று கூடங்களின் அவயவங்களான (ககாராதிஷு உன்மனுந்த- ப்ரதேச- ஸம்ஸ்தேஷு) ககாரம் முதல் உன்மனிவரையிலும் அதாவது அகுலம் முதல் உன்மனிவரை உள்ள பிரதேச நிலைகளில் (ஸகலேஷு) எல்லாம் (அத்த்யுஷ்ட-) மூன்றரை (நிமேஷ- உத்தர) நிமிஷத்திற்கு மேலான (ஸப்ததசாதிக- சதத்ரய த்ருடிபிஃ) முன்னூற்றுப் பதினேழு த்ருடியுள்ள காலத்தில் (உச்சரிதே நாதே ஸதி) நாதமானது உச்சரிக்கப்பட்டால் (தஸ்யாந்தே) அதன் முடிவில் (தத்வவேதனம்) தத்துவ ஞானம் (பவதி) உண்டாகும். (தத் இதம்) அப்படிப் பட்ட இந்த (சைதன்ய- அபிவ்யக்தி- நிதானம் து) அறிவு விளக்கத்தின் உறைவிடம் (தத்வ- விஷுவாக்யம்) தத்வ விஷுவம் எனப்படும்.

அகுலம்— மூலாதாரத்திற்குக் கீழ் உள்ள (அகுல ஸஹஸ்ராரம், ஷட்தளகமலம் எனும்) இரண்டு பத்மங்களும் எல்லாவற்றிற்கும் மேலுள்ள பத்மமும் அகுல பத்மங்கள். மற்றவையெல்லாம் குலபத்மங்கள். மூலாதாரத்திலிருந்து பொதுவாக மந்திர உச்சாரணத்தின் ஆரம்பம் கூறப்பட்டாலும் விசேஷமாக அதின் ஆரம்பம் அதற்கும் கீழே உள்ள அகுல ஸஹஸ்ராரத்திலிருந்து தான் என்பது தந்திர சாஸ்திரங்களின் நிர்ணயம்.

ஸூக்ஷ்மமான கால அளவை— 100 த்ருடி = 1 தத்பரம்; 30 தத்பரம் = 1 நிமேஷம் அல்லது இமை கொட்டும் நேரம். 3½ நிமேஷம் = 1 அத்த்யுஷ்டம்.

தத்வ விஷுவம்— நாதமானது மந்திரத்தின் எழுத்துக்களுடனும் ஸ்தானங்களுடனும் ஒன்றுகூடி 'தத்-த்வ

மணி!' என்னும் போதத்தை உண்டாக்கும் நிலை தத்வ விஷுவம்.

**एवमवस्थाशून्यविषुवन्ति चक्राणि पंच षट् सप्त ।**
**नव च मनोरर्थांश्च स्मरतोऽर्णोच्चारणं तु जपः ॥ ५२ ॥**

*ஏவ- மவஸ்த்தா- சூன்ய விஷுவந்தி*
*சக்ராணி பஞ்ச ஷட் ஸப்த ।*
*நவ ச மனோ- ரர்த்தாம்ச்ச*
*ஸ்மரதோऽர்ணோச்சாரணம் து ஜபः ॥ 52 ॥*

52. (ஏவம்) இவ்வாறாக (அவஸ்தா) அவஸ்தைகள் (பஞ்ச) ஐந்து; (சூன்ய-) சூனியங்கள் (ஷட்) ஆறு; (விஷுவந்தி) விஷுவங்கள் (ஸப்த) ஏழு; (சக்ராணி) சக்ரங்கள் (நவ) ஒன்பது; (ச) மேலும் (மனோः அர்த்தாம்ச்ச) மந்திரத்தின் அர்த்தங்களையும் (ஸ்மரதः) தியானித்துக் கொண்டு (அர்ண- உச்சாரணம் து) அக்ஷரங்களை உச்சரித்தல் (ஜபः) ஜபம்

மந்திரத்தின் அர்த்தங்கள்— பதினைந்து வகையான அர்த்தங்கள் மேலே இரண்டாவது அம்சத்தில் கூறப்படும்.

சக்ரபாவனை— யோகினீ ஹ்ருதயத்தில் இது ஸகளம், ஸகள நிஷ்களம், நிஷ்களம், என மூன்று விதமாய்க் கூறப்படுகிறது.

(i) ஸகளம்— மூலாதாரத்திற்குக் கீழுள்ள அகுல ஸஹஸ்ராரத்தில் த்ரைலோக்ய மோஹனம்; மூலாதாரத்திற்கு கீழுள்ள ஷட்தளகமலத்தில் ஸர்வாசாபரிபூர

கம்; மூலாதாரத்தில் ஸர்வஸம்க்ஷோபணம்; ஸ்வாதிஷ்டானத்தில் ஸர்வஸௌபாக்யதாயகம்; மணிபூரகத்தில் ஸர்வார்த்தஸாதகம்; அனாஹதத்தில் ஸர்வரக்ஷாகரம், விசுத்தியில் ஸர்வ ரோகஹரம், உள்நாக்கு நுனியில் ஸர்வஸித்திப்பிரதம், ஆக்ஞையில் ஸர்வானந்த மயம் என்றிவ்வாறு பாவனை.

(ii) ஸகள- நிஷ்களம்— நெற்றி நடுவில் பிந்துவிலிருந்து தொடங்கி அர்த்த சந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உன்மனி ஆகிய ஒன்பது ஸ்தானங்களில் முன் மாதிரியே ஒன்பது சக்கரங்களை பாவித்தல் ஸகள- நிஷ்களம்.

(iii) நிஷ்களம்— உன்மனிக்கு மேலுள்ள மகாபிந்து ஸ்தானத்திலேயே ஒன்பது சக்கரங்களையும் பாவித்தல் நிஷ்களம்.

ஜபம்— மந்திரத்திலுள்ள 58 வர்ணங்களில் முதல் இரண்டு கூடங்களிலும் 'ஹ்ரீம்' என்பதில் பிந்து முதல் உன்மனிவரையிலுள்ள 18 வர்ணங்களையும் நீக்கி மீதியுள்ள 40 வர்ணங்கள் மாத்திரம் தான் ஜபத்தில் உச்சரிக்கப்படும்.

**भास्कररायेण, गुरोः करुणावशतः, समुन्मिषिते ।**
**वरिवस्यातिरहस्ये पूर्वांशः पूर्णतामगमत् ॥ ५३ ॥**

பாஸ்கரராயேண, குரோঃ
கருணாவசதঃ, ஸமுன்மிஷிதே ।
வரிவஸ்யாதிரஹஸ்யே பூர்வாம்சঃ
பூர்ணதாமகமத் ॥ 53 ॥

53. (பாஸ்கரராயேண) பாஸ்கர ராயரால் (குரோஃ) குருவினுடைய (கருணாவசதஃ) அருள்வசமாக (ஸமுன்மிஷிதே) வெளியிடப்பட்ட (வரிவஸ்யா அதிரஹஸ்யே) வரிவஸ்யா அதி ரகசியம் என்னும் கிரந்தத்தில் (பூர்வாம்சஃ) முதலம்சம் (பூர்ணதாம் அகமத்) பூர்த்தியடைந்தது.

---

# द्वितीयांशः

## த்விதீயாம்சஃ

### अर्थज्ञानस्यावश्यकता - निर्वाहः ॥ १ ॥

**नार्थज्ञान - विहीनं शब्दस्योच्चारणं फलति ।**
**भस्मनि वह्निविहीने न प्रक्षिप्तं हविर्ज्वलति ॥ १ ॥**

## இரண்டாவது அம்சம்

### அர்த்த ஞானத்தின் அவசியம்

*நார்த்தஜ்ஞான- விஹீனம்*
*சப்தஸ்யோச்சாரணம் பலதி ।*
*பஸ்மனி வஹ்னிவிஹீனே*
*ந ப்ரக்ஷிப்தம் ஹவிர்- ஜ்வலதி ॥* **1 ॥ (54)**

*1. (அர்த்தஜ்ஞான- விஹீனம்) அர்த்தஞானமில்லாமல் (சப்தஸ்ய உச்சாரணம்) சப்தத்தை உச்சரித்தல் (ந பலதி) பயனளிக்காது. (வஹ்னிவிஹீனே) நெருப்பில்லாத (பஸ்மனி) சாம்பலில் (ப்ரக்ஷிப்தம்) போடப்பட்ட (ஹவிஃ) ஹவிஸ்ஸானது (ந ஜ்வலதி) ஜ்வலிக்காது.*

ஒ. 'யதேவ வித்யயா கரோதி ச்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி।' தத்துவ ஞானத்துடன் சிரத்தையுடனும் யோகமுறைப்படி எது செய்யப்படுகிறதோ அதுவே மிகுந்த வீரியமுடைய தாகும்.

— *சா.. உப. 1-1-10*

अर्थमजानानां नानाविध - शब्दमात्र - पाठवताम् ।
उपमेयश्चक्रीवान् मलयजभारस्य वोढैव ॥ २ ॥

அர்த்த- மஜானானாம் நானாவித-
சப்தமாத்ர- பாடவதாம் ।
உபமேயச் சக்ரீவான் மலயஜ-
பாரஸ்ய வோடைவ ॥ 2 ॥ (55)*

2. (அர்த்தம் அஜானானம்) அர்த்தம் அறியாதவர் களாய் (நானாவித- சப்தமாத்ர- பாடவதாம்) பல்வகை சப்தங்களை மட்டும் படிப்பவர்களுக்கு (உபமேயஃ) உவமை யாவது (சக்ரீவான்) கழுதை; (மலயஜபாரஸ்ய) மலய மலையில் உண்டான சந்தனக்கட்டையின் பாரத்தை (வோடைவ) அந்தக்கழுதை சுமப்பதுபோலத்தான்.

पुरुषार्थानिच्छद्भिः पुरुषैरर्थाः परिज्ञेयाः ।
अर्थानादरभाजां नैवार्थः प्रत्युतानर्थः ॥ ३ ॥

புருஷார்த்தா- னிச்சத்பிஃ
புருஷைரர்த்தாஃ பரிஜ்ஞேயாஃ ।
அர்த்தாநாதரபாஜாம் நைவார்த்தஃ
ப்ரத்யுதானர்த்தஃ ॥ 3 ॥ (56)

3. (புருஷார்த்தான்) அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தங்களை (இச்சத்பிஃ) விரும்பும் (புருஷைஃ) புருஷர்களால் (அர்த்தாஃ) அர்த்தங்கள்

* அடைப்பில் உள்ள இரண்டாவது எண் முதலிலிருந்து தொடர்பான எண்ணிக்கையைக் குறிப்பது.

(பரிஜ்ஞேயா:) பரிவுடன் அறியத்தக்கவையாம். (அர்த்த-அனுத்ர- பாஜாம்) அர்த்தத்தை ஆதரிக்காதவர்களுக்கு (அர்த்த: ந ஏவ) புருஷார்த்தம் இல்லவே இல்லை (ப்ரத்யுத அனர்த்த:) தவிர அனர்த்தம் உண்டாகும்.

நைவார்த்தா: ப்ரத்யுதானர்த்தா:—பா பே.

अर्थानामुद्देशक्रमः

**अथातः पूर्णगायत्र्याः प्रतिपाद्योऽर्थ आदिमः ।**
**भावार्थः संप्रदायार्थो निगर्भार्थ - स्तुरीयकः ॥ ४ ॥**

உத்தேச அர்த்தங்களின் வரிசை

அதாத: பூர்ணகாயத்ர்யா:
ப்ரதிபாத்யோऽர்த்த ஆதிம: ।
பாவார்த்த: ஸம்ப்ரதாயார்த்தோ
நிகர்ப்பார்த்தஸ்- துரீயக: ॥ 4 ॥ (57)

4, (அதாத:) ஆகையால் இனி (ஆதிம:) முதலில் (பூர்ண- காயத்ர்யா:) பூர்ண காயத்ரியின் (அர்த்த:) அர்த்தம் (பாவார்த்த:)—பிறகு—பாவார்த்தம் (ஸம்ப்ரதாய அர்த்த:) ஸம்பிரதாய அர்த்தம் (துரீயக:) நாலாவதாக (நிகர்ப்பார்த்த:) நிகர்ப்பார்த்தம் (ப்ரதிபாத்ய:) நிரூபிக்கப்படும்.

பூர்ணகாயத்ரீ—'பரோ ரஜஸே ஸாவதோம்' என்னும் நாலாவது பாதத்துடன் கூடியது.

**कौलिकार्थो रहस्यार्थो महातत्त्वार्थ एव च ।**
**नामार्थः शब्दरूपार्थ - श्चार्थो नामैकदेशगः ॥ ५ ॥**

கௌளிகார்த்தோ ரஹஸ்யார்த்தோ
　　மஹாதத்வார்த்த ஏவ ச ।
நாமார்த்தஃ சப்தரூபார்த்தச்-
　　சார்த்தோ நாமைகதேசகஃ ॥　　5 ॥ (58)

5. (கௌளிகார்த்தஃ) கௌளிகார்த்தம், (ரஹஸ்யார்த்தஃ) ரஹஸ்யார்த்தம் (மஹா தத்வார்த்தஃ ஏவ ச) மேலும் மஹாதத்வார்த்தம் (நாமார்த்தஃ) நாமார்த்தம் (சப்த- ரூபார்த்தஃ) சப்த ரூபார்த்தம். (நாம ஏக தேசகஃ) நாம ஏகதேச அர்த்தம்.

शाक्तार्थः सामरस्यार्थः समस्तसगुणार्थकौ ।
महावाक्यार्थ इत्यर्थाः पंचदश्याः स्वसंमिताः ॥ ६ ॥

சாக்தார்த்தஃ ஸாமரஸ்யார்த்தஃ
　　ஸமஸ்த - ஸகுணார்த்தகௌ ।
மஹாவாக்யார்த்த இத்யர்த்தாஃ
　　பஞ்சதச்யாஃ ஸ்வஸம்மிதாஃ　　6 ॥ (59)

6. (சாக்தார்த்தஃ) சாக்த அர்த்தம் (ஸாமரஸ்யார்த்தஃ) ஸமரஸ அர்த்தம் (ஸமஸ்த- ஸகுண- அர்த்தகௌ) ஸமஸ்தார்த்தம், ஸகுணார்த்தம் (மஹாவாக்யார்த்தஃ) மஹாவாக்யார்த்தம் (இதி) என (பஞ்சதச்யாஃ) பஞ்சதசீ மந்திரத்திற்கு (ஸ்வஸம்மிதாஃ) தன்னிடமுள்ள எழுத்திற்குச் சமமாக — பதினைந்து — (அர்த்தாஃ) அர்த்தங்கள்.

गायत्र्यर्थ निरूपणम्

कामयते स ककारः कामो ब्रह्मैव तत्पदस्यार्थः ।
सवितु - र्वरेण्यमिति वै सवितुः श्रेष्ठं द्वितीयवर्णार्थः ॥

காயத்ரீ அர்த்த நிரூபணம்

காமயதே ஸ ககாரஃ காமோ
ப்ரஹ்மைவ தத் பதஸ்யார்த்தஃ ।
ஸவிதுர்- வரேண்யமிதி வை ஸவிதுஃ
ச்ரேஷ்ட்டம் த்விதீய- வர்ணார்த்தஃ ॥ 7 ॥ (60)

7. (காமயதே) 'ஸோऽகாமயத' என்று எந்த பிரம்மம் உபநிஷத்தில் சொல்லப்பட்டதோ (ஸஃ) அதுவே (ககாரஃ) ககாரம் (காமஃ) காமேசுவரன் என்ற (ப்ரஹ்ம ஏவ) பிரம்மமே (தத் பதஸ்ய) காயத்திரியில் உள்ள 'தத்' என்னும் பதத்தின் (அர்த்தஃ) அர்த்தமாகும். (ஸவிதுர் வரேண்யம்) 'ஸவிதுர்வரேண்யம்' (இதி வை) என்ற பதங்களுக்கு (ஸவிதுஃ ச்ரேஷ்ட்டம்) சிரேஷ்டமான பிரபஞ்சகாரணம் என்பது பொருள். (த்விதீய வர்ணார்த்தஃ) இது இரண்டாவது எழுத்தின் அர்த்தம்.

ஓ. 'ஓம் தத் ஸத் இதி நிர்த்தேசோ ப்ரஹ்மணஸ்-த்ரிவிதஃ ஸ்ம்ருதஃ' ஓம் தத்ஸத்' என்று பிரம்மத்திற்கு மூவகையான குறிப்புப் பெயர் கூறப்பட்டுள்ளது. —கீதை 17-23

'கம் ப்ரஹ்ம' — சா. உப. 4-10-5

(1) க (பஞ்சதசாக்ஷரீ முதல் எழுத்து)=காயத்ரியிலுள்ள 'தத்'. ஏ (இரண்டாவது எழுத்து)= ஸவிதுர் வரேண்யம்.

(2) ஏ என்பது பிரபஞ்சகாரணமான யோனியைக் குறிக்கும்; ஸவிதுர்வரேண்யம் என்பதும் அப்படியே.

सर्वान्तर्यामि दधद्भर्गो देवस्य धीति तुर्यार्थः ।
पृथ्वी मही लकारस्तृतीय - तुर्याङ्घ्रिबोधिका माया ॥

ஸர்வாந்தர்யாமி ததத் பர்க்கோ
 தேவஸ்ய தீதி துர்யார்த்தஃ ।
ப்ருத்வீ மஹீ லகாரஸ்- த்ருதீய-
 துர்யாங்க்ரி- போதிகா- மாயா ॥ 8 ॥ (61)

8. (ஸர்வாந்தர்யாமி) அனைத்துள்ளும் உறைவதாயும் (ததத்) அனைத்தையும் தாங்குவதாயும் உள்ளது எனப்பொருள்படும் (பர்க்கோ தேவஸ்ய தீ இதி) 'பர்கோ தேவஸ்ய தீ' என்பது (துர்யார்த்தஃ) மாத்ருகைகளில் நான்காவதான 'ஈ' என்பதின் அர்த்தம்.

(மஹீ) நீமஹியிலுள்ள 'மஹீ' சப்தம் (ப்ருத்வீ) பிருதிவி தத்துவத்தைக் குறிக்கும் (லகாரஃ) லகாரம். (த்ருதீய- துர்யாங்க்ரி- போதிகா) காயத்ரியின் மூன்றுவது நான்காவது பாதங்களைப் போதிப்பது (மாயா) ஹ்ரீம் என்பது.

(3) ஈ= பர்க்கோ தேவஸ்ய தீ.

த்தத் இதி தீ; ததத் ஜகதாதார இத்யர்த்தஃ। தரோ நீத்யேவம் தார்யதே இதி ச்ருதேஃ।

'தஸ்மாத் பர்க்கோ தேவஸ்ய தீத்யேவமீகாரஃ'

—சுருதி.

(4) ல= மஹீ. 'பூமண்டலமேவோக்தம் லகாரேண'
—சுருதி.

(5) ஹ்ரீம்= தியோ யோ நஃ ப்ரசோதயாத் । பரோ ரஜஸே ஸாவதோம் ॥

முக்குணங்களுக்கப்பால் புத்தி குகையில் விளங்குவது பரம்பொருள். அதுவே 'ஹ்ரீம்' என்பதின் அர்த்தமும் காயத்ரீ மூன்றாவது நான்காவது பாதங்களின் அர்த்தமும். 'ஹ்ருதயாகாரவாஸினீ ஹ்ருல்லேகா' என்பது சுருதி.

त्रिपदी त्रिवर्णबोध्या तुर्यस्तदुपरि षडक्षरीगमकः ।
अथ तार्तीये वर्णद्वितयं त्रिपदी षडक्षरीगमकम् ॥ ९ ॥

த்ரிபதீ த்ரிவர்ணபோத்த்யா துர்யஸ்-
தது பரி ஷடக்ஷரீகமகஃ ।
அத தார்த்தீயே வர்ணத்விதயம்
த்ரிபதீ ஷடக்ஷரீ கமகம் ॥ 9 ॥ (62)

9. (த்ரிபதீ) தத், ஸவிதுஃ, வரேண்யம் என்னும் மூன்று பதங்களும் (த்ரிவர்ண போத்த்யா) இரண்டாவது கூடத்திலுள்ள ஹ, ஸ, க எனும் மூன்று எழுத்துக்களின் அர்த்தத்தை போதிப்பனவேயாம். (துர்யஃ) நாலாவது எழுத்தாகிய ஹ (தது பரி) அதற்குமேலே உள்ள (ஷடக்ஷரீ- கமகஃ) ஆறு எழுத்துக்களாலான 'பர்க்கோ தேவஸ்ய தீ' என்பதின் பொருளுடையதாகும். (அத) பிறகு (தார்த்தீயே) மூன்றாவது கூடத்தில் (வர்ணத்விதயம்) ஸ, க என்ற இரண்டெழுத்துக்கள் (த்ரிபதீ) 'தத்-

ஸவிதுர்- வரேண்யம்,' 'பர்க்கோ- தேவஸ்ய்- தி'எனும் மும் மூன்று பதத்தொகுதிகளின் பொருளுடையதாகும்.

இரண்டாவது கூடம் —

(6) ஹ=தத் (7) ஸ=ஸவிதுஃ (8) க=வரேண்யம் (9) ஹ=பர்க்கோ தேவஸ்ய தி

[(10) ல=மஹி (11) ஹ்ரீம்=தியோ யோ நஃ ப்ரசோதயாத்—இது அடுத்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது]:

மூன்ருவது கூடம்—

(12) ஸ=தத் ஸவிதுர் வரேண்யம்ஃ (13) க=பர்க்கோ தேவஸ்ய திமஹி (14) ல= மஹி (15) ஹ்ரீம்= தியோ யோ நஃ ப்ரசோதயாத்.

कूटद्वितीये शेषं पूर्ववदुन्नेयमिति तु विद्यायाः ।
गायत्र्यर्थ - स्त्रिपुरोपनिषदि कथितस्तथैव भागवते ॥

கூடத்விதீயே சேஷம் பூர்வவ-
துந்நேயமிதி து வித்யாயாஃ ।
காயத்ர்யர்த்தஸ்- த்ரிபுரோபநிஷதி
கதிதஸ்-ததைவ பாகவதே ॥ 10 ॥ (63)

10. (கூடத்விதீயே) இரண்டாவது மூன்ருவதாகிய இரு கூடங்களிலும் (சேஷம்) மீதியுள்ள 'ல' 'ஹ்ரீம்' என்பவற்றிற்கு (பூர்வவத்) ஏற்கெனவே கூறியுள்ளபடி (உந்நேயம்) அர்த்தம் ஊகித்துக்கொள்ளப்பட வேண்டும். (இதி து) இவ்வாருக (வித்யாயாஃ) ஸ்ரீவித்தைக்கு (காயத்ர்யர்த்தஃ) காயத்ரீ அர்த்தம் (த்ரிபுரோபநிஷதி)

த்ரிபுரோபநிஷத்தில் (கதிதঃ) கூறப்பட்டுள்ளது; (ததா ஏவ) அவ்வாறே (பாகவதே) ஸ்ரீதேவீ பாகவதத்திலும்.

ஓ. 'தத் ஸவிதுர் வரேண்யமிதி ஸகாராக்ஷரঃ ஸமன்விதঃ। பர்க்கோ தேவஸ்ய தீத்யனேன ககாரோऽபி ஸமன்விதோ பவதி। மஹீத்யனேன லகாரঃ ஸமன்விதঃ இதி ஜ்ஞேயঃ। சேஷம்—தியோ யோ நঃ ப்ரசோதயாத்—பரோ ரஜஸே ஸாவதோம்—இதி காம்யம் ரமணீயம் ஹ்ருல்லேகாऽऽபி ஸமன்விதா ஸ்யாத்। ஏவம் சக்தி கூடமபி ஸ்பஷ்டீக்ருதம்॥ —த்ரிபுரதாபினீ உபநிஷத்

த்ரிபுரோபநிஷத் என்று சுலோகத்தில் குறிக்கப் பட்டது த்ரிபுரதாபினீ உபநிஷத்தேயாம்.

ஓ. 'ஸர்வசைதன்ய- ரூபாம் தாம் ஆத்யாம் வித்யாஞ்ச தீமஹி। புத்திம் யா நঃ ப்ரசோதயாத்॥'

— தேவீ பாகவதம் 1· 1.

பஞ்சதசீ மந்திரத்தின் ஒவ்வொரு கூடத்திற்கும் பூர்ண காயத்ரியின் அர்த்தம் சித்திப்பதால் பஞ்ச தசியை ஒரு தடவை உச்சரித்தால் அது மூன்று தடவை காயத்ரியை ஜபித்ததற்கு ஒப்பாகிறது.

## भावार्थ निरूपणम्

**वामेच्छे ब्रह्मभारत्यौ ज्येष्ठाज्ञाने हरिक्षिती ।**
**रौद्रीक्रिये शिवापर्णे इत्येतन्मिथुनत्रयम् ॥ ११ ॥**

## பாவார்த்த நிருபணம்

வாமேச்சே ப்ரஹ்ம - பாரத்யௌ
ஜ்யேஷ்ட்டா - ஜ்ஞானே ஹரிக்ஷிதீ ।
ரௌத்ரீக்ரியே சிவாபர்ணே
இத்யேதன் மிதுனத்ரயம் ‖ 11 ‖ (64)

11. (வாமேச்சே) வாமா சக்தியும் இச்சா சக்தியும் (ப்ரஹ்ம - பாரத்யௌ) பிரம்மா என்ற புருஷரூபமாகவும் பாரதீ என்ற ஸ்திரீரூபமாகவும் இருப்பவர்கள். (ஜ்யேஷ்ட்டா-ஜ்ஞானே) ஜ்யேஷ்டா சக்தியும் ஞானசக்தியும் (ஹரி-க்ஷிதீ) விஷ்ணு என்ற புருஷ ரூபமாகவும் பூமி என்ற ஸ்திரீரூபமாகவும் இருப்பவர்கள். (ரௌத்ரீ-க்ரியே) ரௌத்ரீசக்தியும் க்ரியாசக்தியும் (சிவ-அபர்ணே) சிவன் என்ற புருஷரூபமாகவும் பார்வதீ என்ற ஸ்திரீ ரூபமாகவும் இருப்பவர்கள். (இதி) இங்ஙனம் (ஏதத்) இது (மிதுனத்ரயம்) மூன்று தம்பதிகளின் வடிவம்.

त्रिभिः कूटैः क्रमाद्वाच्य - मीकारत्रितयेन तु ।
एतत् त्रय - समष्ट्यात्म - वाच्यं शान्ताम्बिकात्मकम् ॥

த்ரிபிஃ கூடைஃ க்ரமாத்வாச்ய -
மீகாரத்ரிதயேன து ।
ஏதத் த்ரய- ஸமஷ்ட்யாத்ம -
வாச்யம் சாந்தாம்பிகாத்மகம் ‖ 12 ‖ (56)

12. (த்ரிபிஃ கூடைஃ) மூன்று கூடங்களாலும் (க்ரமாத்) மேற்கூறிய வரிசையில் (வாச்யம்) மூன்று தம்பதிகளும் கூறப்படுவர். (ஈகாரத்ரிதயேன து) மூன்று ஈகா

ரங்களாலோ வெனின் (ஏதத் த்ரய-) இம்மூன்று தம்பதி களின் (ஸமஷ்ட்யாத்ம- வாச்யம்) ஸமஷ்டிவடிவானது கூறப்படும்; (சாந்தாம்பிகாத்மகம்) அது சாந்தாம்பி கையின் வடிவாகும்.

இங்கு பரிவார்த்தத்தில் ஈகாரம் நீங்கலாக ஒவ் வொரு கூடத்திற்கும் ஒவ்வொரு மிதுனமும், ஈகாரத் திற்குத் துரீய மிதுனமாகிய சாந்த - அம்பிகையும் பொருள். இனிமேல் வரும் சாக்தார்த்தத்தில் ஒவ் வொரு கூடத்திற்கும் மும்மூன்று மிதுனங்களும் ஈகாரத் திற்குச் சாந்தாம்பிகையுமாகப் பொருள் கொள்ளப் படுகிறது.

மூன்று கூடங்கள்— 'ஈகார விமுக்தஸ்ய கூடத்ரயேண க்ரமேணார்த்தঃ'— ஈகாரம் நீங்கிய மூன்று கூடங்கள் இங்கு வரிசையாகக் கொள்ளப்படுபவை. அதாவது (1) க ஏ ஈலஹ்ரீ (2) ஹஸகஹலஹ்ரீ (3) ஸகலஹ்ரீ.

ஓ. 'அக்ஷரார்த்தோ ஹி பாவார்த்தঃ கேவலঃ பர மேச்வரி। யோகினீபிஸ் ததா வீரைர்- வீரேந்த்ரைঃ ஸர் வதா ப்ரியே॥ சிவசக்தி ஸமாயோகாஜ் ஜனிதோ மந்த்ர ராஜகঃ॥' — யோகினீ ஹ்ருதயம்

யோகினிகள் ஸரஸ்வதி முதலிய மூவர்; வீரேந் திரர்கள் பிரம்மா முதலிய மூவர்; வீரர்கள் உபாஸகர் களாகிய ஸகலர் முதலிய மூவர். இவர்களுடைய ஸம் யோகம் மந்திர வடிவம்.

**यद्वा गीः सकलब्रह्म - प्रभृतीनां त्रयं त्रयम् ।**
**त्रिकूटवाच्यं मायाया - स्तुरीयं मिथुनं मतम् ॥ १३ ॥**

யத்வா கீ: ஸகலப்ரஹ்ம-
ப்ரப்ருதீனும் த்ரயம் த்ரயம் ।
த்ரிகூடவாச்யம் மாயாயாஸ்-
துரீயம் மிதுனம் மதம் ‖ 13 ‖ (66)

13. (யத்வா) அல்லது (ஸகல- ப்ரஹ்ம- ப்ரப்ருதீனும்) ஸகலர்கள் என்ற ஸாதகர்களும் ப்ரஹ்மா முதலியவர்களும் ஆகியவர்களின் (த்ரயம் த்ரயம்) மூவர் தொகுதிகள் (த்ரிகூடவாச்யம்) மூன்று கூடங்களின் வாச்சியார்த்தம் என்பது (கீ:) கூறப்பட்டதாகும். (மாயாயா:) மாயா பீஜத்திற்கு (துரீயம் மிதுனம்) நான்காவதான மிதுனம் (மதம்) ஒப்புக்கொள்ளப்பட்டதாகும்.

ஸகலர்— ஸகலர், பிரளயாகலர், விஜ்ஞானகேவலர் என்று உபாஸகத்ரயம். இவர்கள் ஸகலபாஹ்ய வஸ்துக்களையும் தங்களிடம் லயம் செய்யும் வீரர்கள்.

ப்ரஹ்மப்ரப்ருதி— ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்திரர் ஆகிய வீரேந்திரர்களும்; ஸரஸ்வதி முதலிய யோகினிகள் மூவரும்.

நான்காவதான மிதுனம்— சிவசக்தி ஐக்ய ஸ்வரூபமான சாந்தாம்பிகை.

वामेच्छाद्याः षडीकार इति सप्तभि-रक्षरैः ।
त्रिरावृत्तैरियं विद्या संजाता तेन तन्मयी ॥ १४ ॥

வாமேச்சாத்யா: ஷடீகார
இதி ஸப்தபி- ரக்ஷரை: ।
த்ரிராவ்ருத்தைரியம் வித்யா
ஸஞ்ஜாதா தேந தன்மயீ ‖ 14 ‖ (67)

14. (வாமா- இச்சா- ஆத்யாः) வாமா, இச்சா முதலிய (ஷட்) ஆறும் (ஈகாரः) ஈகாரமும் (இதி) என (ஸப்தபிः) ஏழு (அக்ஷரைः) அக்ஷரங்களால் (த்ரிः ஆவ்ருத்தைः) மூன்று ஆவிருத்திகளால் (இயம்) இந்த (வித்யா) ஸ்ரீவித்தையானது (ஸஞ்ஜாதா) உண்டானது; (தேன) அதனால் (தன்மயீ) அவ்வடிவமானது.

ஏழு அக்ஷரங்களின் மூன்று ஆவிருத்தி —

(1) க ஏ ஈ ல ஹ்ரீ ஈ. (2) ஹ ஸ க ல ஹ்ரீ ஈ.

(3) ஸ ஹ க ல ஹ்ரீ ஈ. இரண்டாவது கூடத்திலுள்ள இரண்டு ஹகாரங்களுள் ஒன்று மூன்றாவது கூடத்தில் சேர்க்கப் படுகிறது.

தன்மயீ— மந்திரமாவது இங்ஙனம் ஸமஷ்டி வடிவுடன் நான்கு மிதுனவடிவான தேவதாஸ்வரூபமாகிறது.

**वामादि - सप्तशक्तीनां समष्टिः परदेवता ।**
**षट्त्रिंशत्तत्त्वरूपाऽस्मान् मात्रयाऽपि न भिद्यते ॥ १५ ॥**

வாமாதி- ஸப்தசக்தீனாம்
ஸமஷ்டிः பரதேவதா ।
ஷட்த்ரிம்சத்- தத்வரூபாऽஸ்மான்
மாத்ரயாऽபி ந பித்யதே ॥ 15 ॥ (68

15. (வாமாதி- ஸப்தசக்தீனாம்) வாமா முதலிய ஏழு சக்திகளின் (ஸமஷ்டிः) தொகுதி (ஷட்த்ரிம்சத்) முப்பத்தாறு (தத்வ ரூபா) தத்துவங்களின் வடிவான (பரதேவதா) பரதேவதையேயாம். (அஸ்மாத்) அதினின்று (மாத்ரயா அபி) சிறிதளவு கூட (ந பித்யதே) பேதப்படுவதில்லை.

ந பித்யதே— வியஷ்டி ரூபமான அக்ஷரங்களுக்கும் அவைகள் குறிப்பிடும் சக்திகளுக்கும் தத்துவங்களுக்கும் ஸமஷ்டி ரூபமான பரதேவதைக்கும் சிறிதும் பேத மில்லை என்று அறிவதே பாவார்த்தமாகும்.

வாமாதி— சுலோகம் 11 (64) பார்க்க.

ஒ. 'தேஷாம் ஸமஷ்டிரூபேண பராசக்திம் து மாத்ருகாம்। கூடத்ரயாத்மிகாம் தேவீம் ஸமஷ்டி வ்யஷ்டி-ரூபிணீம்। ஆத்யாம் சக்திம் பாவயந்தோ பாவார்த்த இதி மன்வதே ॥ — யோகினீ ஹ்ருதயம்.

**अ-ह-कारौ शिवशक्ती शून्याकारौ परस्पराश्लिष्टौ ।**
**स्फुरण-प्रकाशरूपावुपनिषदुक्तं परं ब्रह्म ॥ १६ ॥**

*அ-ஹ-காரௌ சிவசக்தீ சூன்யாகாரௌ*
*பரஸ்பராச்லிஷ்டௌ।*
*ஸ்ப்புரண- ப்ரகாசரூபாவுபநிஷ-*
*துக்தம் பரம் ப்ரஹ்ம ॥* 16 ॥ (69)

16. (அ-ஹ-காரௌ) அகார ஹ கார வடிவினர் (சிவசக்தீ) சிவனும் சக்தியும்; (சூன்யாகாரௌ) பிந்து வடிவினர்; (பரஸ்பர- ஆச்லிஷ்டௌ) ஒருவரையொருவர் தழுவியவராகவும் (ஸ்புரண-ப்ரகாசரூபௌ) விமர்ச வடிவாகவும் பிரகாச வடிவாகவும் இருப்பவர்கள்; (உப நிஷத் உக்தம்) உபநிஷத்துக்களில் கூறப்பட்ட (பரம் ப்ர ஹ்ம) பரப்பிரம்மம்— அவர்களின் ஐக்கிய ஸ்வரூபமே யாம்.

ஒ. 'அஹமித்யேக- மத்வைதம் யத்ப்ரகாசாத்ம விப்ரமஃ। அகாரஃ ஸர்வவர்ணாக்ர்யஃ ப்ரகாசஃ பரமஃ

சிவ: ॥ ஹகாரோऽந்த்ய: கலாரூபோ விமர்சாக்ய: ப்ர கீர்த்தித: । அநயோ: ஸாமாரஸ்யம் யத் பரஸ்மின்ன ஹமி- ஸ்ப்புடம்.

**विश्वसिसृक्षावशतः स्वार्धां शक्तिं विलोकयद् ब्रह्म ।**
**बिन्दू - भवति तमिन्दुं प्रविशति शक्तिस्तु रक्तबिन्दुतया ॥**

விச்வஸிஸ்ருக்ஷாவசத : ஸ்வார்த்தாம்
சக்திம் விலோகயத் ப்ரஹ்ம ।
பிந்தூ- பவதி தமிந்தும் ப்ரவிசதி
சக்திஸ்து ரக்த-பிந்துதயா ॥ 17 ॥ (70)

17. (விச்வஸிஸ்ருக்ஷாவசத:) உலகைச் சிருஷ்டி செய்யும் விருப்பத்துடன் (ப்ரஹ்ம) பிரம்மமானது (ஸ்வ- அர்த்தாம்) தனது பாதிவடிவாகிய (சக்திம்) சக்தியை (விலோகயத்) பார்த்ததும் (பிந்தூ பவதி) பிந்துவடிவமாக ஆகிறது. (சக்தி: து) சக்தியோ எனின் (ரக்தபிந்துதயா) இரத்த பிந்து வடிவில் (தம் இந்தும்) சந்திரனைப்போல் வெண்மையான சிவபிந்துவில் (ப்ரவி சதி) பிரவேசிக்கின்றது.

இந்தும்— 'அத்ர சிவ பிந்தோ: சுக்லத்வாத் சந்த்ராத் மகத்வாத்- பிந்து வாசகத்வாத் சந்த்ரபதாஞ - மிந்து பதேன பிந்து நிர்த்தேச: க்ருத:' சிவபிந்து வெண்மையாத லால் சந்திரவடிவினதாய்க் கூறப்பட்டது. அதனல் 'பிந்து' என்னும் சொல்லில் பகாரம் நீங்கி அது 'இந்து' என ஆயிற்று.

**एतत् पिण्डद्वितयं विसर्गसंज्ञं हकारचैतन्यम् ।**
**मिश्रस्तु तत्समष्टिः कामाख्यो रवि - रकार चैतन्यम् ॥**

ஏதத் பிண்டத்விதயம் விஸர்க்க-
ஸம்ஜ்ஞம் ஹகார- சைதன்யம் ।
மிச்ரஸ்து தத் ஸமஷ்டிஃ காமாக்க்யோ
ரவி- ரகார- சைதன்யம் ॥ 18 ॥ (71)

18. (ஏதத்) இந்த ரக்தம் சுக்லம் என்ற (பிண்டத்விதயம்) இரண்டு பிந்துக்களும் (விஸர்க்க- ஸம்ஜ்ஞம்) விஸர்க்கம் என்னும் சொல்லால் குறிக்கப்படுபவை (ஹகார- சைதன்யம்) ஹகாரத்திற்குச் சைதன்ய மாயிருப்பவை. (மிச்ரஃ து) மிச்ர பிந்துவோ எனின் (தத் ஸமஷ்டிஃ) அவற்றின் தொகுதி (காமாக்க்யஃ) காமன் எனப்படுவது, (ரவிஃ) சூரிய ஸ்வரூபம் (அகார சைதன்யம்) அகாரத்தின் சைதன்யம்.

एषाऽहं पद - तुर्यस्वर - कामकलादि - शब्द निर्देश्या ।
वागर्थ - सृष्टिबीजं तेनाहन्तामयं विश्वम् ॥ १९ ॥

ஏஷாऽஹம் பத- துர்யஸ்வர-
காமகலாதி- சப்த - நிர்த்தேச்யா ।
வாகர்த்த- ஸ்ருஷ்டி பீஜம்
தேனஹந்தாமயம் விச்வம் ॥ 19 ॥ (72)

19. (அஹம் பத-) அஹம் என்னும் பதத்தினலும் (துர்யஸ்வர-) நாலாவது ஸ்வரமாகிய ஈகாரத்தாலும் (காமகலா- ஆதி- சப்த நிர்த்தேச்யா) காமகலை முதலிய சொற்களாலும் குறிப்பிடப்படும் (ஏஷா) இந்த பிரம்மம் (வாக்- அர்த்த- ஸ்ருஷ்டி- பீஜம்) சொல்லாகவும் பொருளாகவுமுள்ள சிருஷ்டிக்கு வித்தாகும். (தேன) அதனல் (விச்வம்) உலகம் (அஹந்தா- மயம்) அஹம் என்பதின் ஸ்வரூபமேயாகும்.

अन्त्यप्रथमे मध्यचतुर्थे मन्त्रेऽपि तौ व्यक्तौ ।
तेनाम्बामनु - जगता - मभेद - एवात्र भावार्थः ॥ २० ॥

அந்த்ய- ப்ரதமே மத்ய- சதுர்த்தே
மந்த்ரேऽபி தௌ வ்யக்தௌ ।
தேனும்பா- மனு- ஜகதா மபேத
ஏவாத்ர பாவார்த்தః ॥ 20 ॥ (73)

20. (அந்த்ய ப்ரதமே) கடைசி கூடத்தின் முதலெழுத்தாகிய ஸகாரத்திலுள்ள அகாரத்திலும் (மத்ய சதுர்த்தே) மத்திய கூடத்திலுள்ள நாலாவதெழுத்தாகிய ஹகாரத்திலும் (மந்த்ரேऽபி) மந்திரத்திலும் கூட (தௌ) சிவனும் சக்தியுமாகிய இரண்டு தத்துவமும் (வ்யக்தௌ) வெளிப்படை. (தேன) அதனுல் (அம்பா-மனு- ஜகதாம்) தேவிக்கும் மந்திரத்திற்கும் உலகிற்கும் (அபேதः ஏவ) பேதமின்மையே (அத்ர) இங்கு (பாவார்த்தः) பாவார்த்தம் எனப்படுவது.

பாவார்த்தः— 'பாவः ஸத்தா- ஸ்வபாவ- அபிப்ராய- சேஷ்டா- ஆத்ம- ஜன்மஸு ।' பாவः என்ருல் ஜன்மம் என்ற பொருளில் பாவார்த்தம் பிறப்பைத் தெரிவிப்பது எனினும் ஆம்.

संप्रदायार्थ - निरूपणम् ॥ ५ ॥

व्योमादि - जनक - हकरसलार्णै - र्घटनेन पंचभूतमयी ।
पंच चतुस्त्रिद्व्येकग - शब्दादि - गुणात्म - पंचदशवर्णा ॥

## 5. ஸம்ப்ரதாயார்த்த நிருபணம்

வ்யோமாதி- ஜனக- ஹகரஸலார்ணைர்-
க்கடனேன பஞ்சபூதமயீ ।

பஞ்ச சதுஸ்த்ரி-த்வ்யேகக- சப்தாதி-
குணாத்ம- பஞ்சதச- வர்ணா ‖　　21 ‖ (74

21. (வ்யோமாதி) ஆகாயம் முதலியவற்றை (ஜனக-) பிறப்பிக்கும் (ஹ-க-ர-ஸ-ல- அர்ணை:) ஹ, க, ர, ஸ, ல என்ற எழுத்துக்களுடன் (கடனேன) கூடியிருப்பதால்— பஞ்சதசீ மந்த்ரம்— (பஞ்சபூதமயீ) ஐந்து மகாபூதங்களின் ஸ்வரூபமாகும். (பஞ்ச-) ஐந்து (சதுஃ-) நான்கு (த்ரி-) மூன்று (த்வி-) இரண்டு (ஏகக) ஒன்று ஆகிய (சப்தாதி குணாத்ம) சப்தம் முதலிய குணங்களின் தொகுதியாக— பஞ்சபூதங்களில் உள்ள குணங்கள் பதினைந்தும்— (பஞ்சதச வர்ணா) மந்திரத்திலுள்ள பதினைந்து எழுத்துக்கள் வடிவாம்.

ஹ-ர-க-ஸ-ல— 'ஹ' ஆகாயம், 'க' வாயு, 'ர' அக்னி, 'ஸ' ஜலம் 'ல' பிருதிவி. ஆகாயத்தின் குணம் சப்தம் ஒன்றே; வாயுவின் குணங்கள் இரண்டு, சப்தம் ஸ்பர்சம்; அக்னியின் குணம் மூன்று சப்தம் ஸ்பர்சம் ரூபம்; ஜலத்தின் குணம் நான்கு, சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம்; பிருதிவியின் குணம் ஐந்து, சப்தம் ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம். ஆக பஞ்சபூதங்களின் குணங்கள் $1+2+3+4+5 = 15$.

तत्तज्जनकै - र्वर्णैस्तत्तत्संख्यैस्तु तद्गुणा जाताः ।
कामकलाभिश्चतसृभि - रासीत् स्पर्शश्चतुर्विधो न तु कैः ॥

தத்தத்- ஜனகைர்- வர்ணைஸ்-தத்தத்-
ஸங்க்யைஸ்து தத் குணா ஜாதா: ।
காமகலாபிச்- சதஸ்ருபி- ராஸீத்
ஸ்பர்சச்- சதுர்விதோ ந து கை: ‖ 22 ‖ (75)

22. (தத்தத் ஜனகைஃ) அந்தந்த பூதங்களைப் பிறப்பிக்கும் (வர்ணை:) எழுத்துக்களால் (தத்தத் ஸங்க்யைஃது) அந்தந்த எண்ணிக்கைகளுடன் கூடிய (தத் குணஃ) அந்தந்த பூதங்களின் குணங்கள் (ஜாதாஃ) பிறந்தன. (காம- கலாபிஃ) 'ஈ' என்னும் காமகலையாகிய (சதஸ்ருபிஃ) நான்கினுல் (ஸ்பர்சஃ) ஸ்பர்சகுணம் (சதுர்விதஃ) நான்கு விதமாக (ஆஸீத்) ஆயிற்று; (ந து கைஃ) வாயுவின் எழுத்தான 'க' வால் அன்று.

சப்தகுணம்— பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்ற ஐந்திலும் இருப்பதால், சப்தகுணம் ஐந்து வகைப்படும். இவ்வைந்தும் மந்திரத்திலுள்ள ஐந்து 'ஹ' காரங்களினின்று பிறந்தவையாம்.

ஸ்பர்சகுணம்— பிருதிவி அப்பு தேயு வாயு ஆகிய நான்கில் இந்த நான்கைப் பிறப்பிக்க நான்கு 'க' காரங்கள் மந்திரத்தில் இல்லையே என்ருல் அவை 'ஈ'காரங்களின்று பிறந்தவை, 'க' காரங்களாலன்று என்று இந்த சுலோகத்தின் இரண்டாவது அடி கூறுகிறது.

ஓ. 'மஹாமாயா த்ரயேணுபி காரணேன ச பிந்துனு। வாய்வக்னி- ஜல பூமீனும்- ஸ்பர்சானுஞ்ச சதுஷ்டயம்। உத்பன்னம் பாவயேத் தேவி ஸ்தூல- ஸூக்ஷ்ம- விபேததஃ ॥'

'பிந்துனு' என்னும் பதம் ஈகாரங்களுக்கு விசேஷணம். ஈகாரங்கள் நான்காவது பிந்துவினுல் உற்பன்னமானவை. இதனுல் வாயு மண்டலத்திற்கு பிந்து பம் அடையாளம். வாயுவிலுள்ள ஸ்பர்சம் ஸ்தூலம்; அக்னி ஜல பூமிகளில் ஸூக்ஷ்மம்.

ரூபகுணம்— ஹ்ரீங்காரத்திலுள்ள மூன்று 'ர'காரங்களின்று பிறந்தவை மூன்று வகைப்பட்ட ரூப குணம்.

ரஸகுணம்—இரண்டு 'ஸகாரங்களினின்று பிறந்தவை இருவகைப்பட்ட ரஸகுணம்.

கந்தகுணம்— 'ல' காரத்தினின்று பிறந்தது.

ஒரு லகாரத்தால் கந்தகுணம் கூறப்பட்டதெனின் மற்று முள்ள இரண்டு லகாரங்களின் பயன் என்ன என்ற கேள்விக்கு இங்கு விடை கூறப்படுகிறது.

**भुवनत्रय - संबन्धा - दासीत् त्रेधा लकारोऽपि ।**
**ये ये यद्यज्जनका · स्तेषां तेषां त एवार्थाः ॥ २३ ॥**

புவனத்ரய- ஸம்பந்த்தா-தாஸீத்
த்ரேதா லகாரோऽபி ।
யே யே யத்யஜ்ஜனகாஸ்- தேஷாம்
தேஷாம் த ஏவார்த்தாঃ ॥ 23 ॥ (76)

23. (புவன- த்ரய- ஸம்பந்தாத்) முவ்வுலகங்களுடன் சம்பந்தத்தால் (லகாரঃ அபி) லகாரமும் (த்ரேதா ஆஸீத்) மூன்ருக ஆயிற்று. (யே யே) எந்தெந்த எழுத்துக்கள் (யத் யத் ஜனகাঃ) எது எதைப் பிறப்பிக்கின்றனவோ (தேஷாம் தேஷாம்) அதற்கு (தே ஏவ) அவையே (அர்த்தாঃ) அர்த்தங்களாம்.

**ककारत्रय - वाच्यास्तु सकलाः प्रलयाकलाः ।**
**विज्ञानकेवलाश्चेति त्रिप्रकारा उपासकाः ॥ २४ ॥**

ககாரத்ரய- வாச்யாஸ்து
ஸகலா ஃ ப்ரலயா- கலாஃ ।
விஜ்ஞான- கேவலாச்சேதி
த்ரிப்ரகாரா உபாஸகாஃ ‖ 24 ‖ (77)

24. (ககாரத்ரய- வாச்யாஃ து) மூன்று ககாரங்களால் கூறப்படுவதோ எனின் (ஸகலாஃ) ஸகலர், (ப்ரளயாகலாஃ) பிரளயாகலர், (விஜ்ஞானகேவலாஃ ச) விஜ்ஞான கேவலர் (இதி) என்ற (த்ரிப்ரகாராஃ) மூன்று வகைப்பட்ட (உபாஸகாஃ) உபாஸகர்கள்.

अकारै - र्दशसंख्याकै - रुच्यन्ते जीवराशयः ।
विद्यायाः प्राणभूतः संस्तद्वाच्येकादशः स्वरः ॥ २५ ॥

அகாரைர்- தசஸங்க்யாகை-
ருச்யந்தே ஜீவராசய ।
வித்யாயாஃ ப்ராணபூதஃ ஸம்ஸ்தத்
வாச்யேகாதசஃ ஸ்வரஃ ‖ 25 ‖ (78)

25. (அகாரைஃ தச- ஸங்க்யாகைஃ) பத்து எனக் கணக்காகும் அகாரங்களால் (ஜீவராசயஃ) ஜீவராசிகள் (உச்யந்தே) கூறப்படுகின்றன. (வித்யாயாஃ) வித்தைக்கு (ப்ராணபூதஃ ஸன்) உயிராயிருந்து கொண்டு (ஏகாதசஃ ஸ்வரஃ) பதினொராவது உயிரெழுத்தாகிய 'ஏ' (தத்- வாசீ) உலகிற்கு உயிராயிருக்கும் 'தத்' என்னும் பரம் பொருளைக் குறிக்கும்.

அகாரைஃ— க, ல, ஹ, ஸ, க, ஹ, ல, ஸ, க, ல என்று பத்து அக்ஷரங்களில் உள்ள அகாரங்களால்.

ஓ. 'ஶ்ரீகண்டதசகம் தத்வ - தவ்யக்தஸ்ய ஹி வாச கம்। ப்ராணபூதஃ ஸ்திதோ தேவி தத்வ - தேகாதசஃ ஸ்வரஃ। ஏகஃ ஸந்நேவ புருஷோ பஹுதா ஜாயதே ஹி ஸஃ।' ஶ்ரீகண்டா அகாராஃ॥ அவ்யக்தோ ஜீவஃ।

**बिन्दुभिस्त्रिभिरुच्यन्ते रुद्रेश्वर-सदाशिवाः ।**
**शान्तिः शक्तिश्च शंभुश्च नादत्रितयबोधनाः ॥ २६ ॥**

பிந்துபிஸ்- த்ரிபிருச்யந்தே
ருத்ரேச்வர- ஸதாசிவாஃ।
சாந்திஃ சக்திச்ச சம்புச்ச
நாதத்ரிதய- போதநாஃ॥ 26 ॥ (79)

26. (பிந்துபிஃ- த்ரிபிஃ) மூன்று ஹ்ரீங்காரங்களில் உள்ள பிந்துக்களால் (ருத்ர - ஈச்வர-ஸதாசிவாஃ) ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவன் ஆகியோர் (உச்யந்தே) கூறப் படுகின்றனர். (சாந்திஃ சக்திச்ச சம்புச்ச) சாந்தியும் பிர கிருதியும் சுத்த வித்தையும் (நாதத்ரிதய - போதநாஃ) மூன்று நாதங்களால் போதிக்கப்படுகின்றனர்.

நாதம்—சந்திரகலை, ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உன்மனி ஆகிய எட்டும் நாதம் என்னும் பதத்தால் குறிக்கப்படும்.

**एवं सप्तत्रिंशत् संख्याकपदै - र्महाविद्या ।**
**षट्त्रिंशत्तत्त्वानां तत्त्वातीतस्य चाभिधात्रीयम् ॥ २७ ॥**

ஏவம் ஸப்தத்ரிம்சத் ஸங்க்யாக
பதைர்- மஹாவித்யா।

ஷட்த்ரிம்சத்- தத்வானும்
தத்வாதீதஸ்ய சாபிதாத்ரீயம் ॥ 27 ॥ (80)

27. (ஏவம்) இவ்வாறு (ஸப்தத்ரிம்சத் - ஸங்க்யாக - பதைஃ) முப்பத்தேழு பதங்களால் (மஹாவித்யா) மஹாவித்தை—அமைகின்றது. (இயம்) இது (ஷட்த்ரிம்சத்) முப்பத்தாறு (தத்வானும்) தத்துவங்களுக்கும் (தத்வாதீதஸ்ய ச) தத்துவத்திற்கு அப்பாற்பட்ட பரப்பிரம்மத்திற்கும் (அபிதாத்ரி) அடையாளமாய் விளங்குவது.

உயிரெழுத்துக்கள் அ 10, ஈ 4, ஏ 1=15

மெய்யெழுத்துக்கள் க் 3, ல் 3, ஹ் 5, ர் 3, ஸ் 2=16

பிந்துக்கள் 3, நாதங்கள் 3, ஆக 37.

முப்பத்தாறு தத்துவங்கள்— (1) ஆத்ம தத்துவம்—ப்ரக்ருதி, அஹங்காரம், புத்தி, மனது (4) த்வக், சக்ஷுஸ், ச்ரோத்ரம், ஜிஹ்வா, க்ராணம் (5); வாக் பாணி, பாதம், பாயு உபஸ்தம் (5); சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் (5); ஆகாசம், வாயு, அக்னி, ஜலம். பூமி (5) ஆக 24.

(2) வித்யா தத்துவம்— மாயை, கலை, அவித்தை, ராகம், காலம், நியதி, புருஷன் ஆக 7.

(3) சிவ தத்துவம்— சிவன், சக்தி, ஸதாசிவன், ஈசுவரன், சுத்தவித்தை ஆக 5.

தத்துவாதீதமான பரப்ரஹ்மம் 'ஏ' காரத்தின் அர்த்தம்.

ஒ. ஸ்வர- வ்யஞ்ஜன- பேதேன ஸப்தத்ரிம்சத் ப்ரபேதினீ। ஸப்த த்ரிம்சத் ப்ரபேதேன ஷட்த்ரிம்சத் தத்வருபிணீ। தத்வாதீத- ஸ்வபாவா ச வித்யைஷா பாவ்யதே மயா.

जन्य - जनकयो - र्भेदाभावाद्वाच्यस्य वाचकेनापि।
ब्रह्मणि जगतो जगति च विद्याऽभेदस्तु संप्रदायार्थः॥

ஜன்ய ஜனகயோர்- பேதாபாவாத்-
வாச்யஸ்ய வாசகேனாபி।
ப்ரஹ்மணி ஜகதோ ஜகதி ச
வித்யாऽபேதஸ்து ஸம்ப்ரதாயார்த்தः ॥ 28 ॥ (81)

28. (ஜன்ய- ஜனகயோः) பிறந்ததற்கும் பிறப்பித்ததற்கும் (வாச்யஸ்ய வாசகேன அபி) சொல்லுக்கும் பொருளுக்கும் (பேத- அபாவாத்) வேற்றுமையின்மையால் (ப்ரஹ்மணி- ஜகதः) பிரம்மத்திடம் உலகிற்கும் (ஜகதி ச வித்யா - அபேதः து) உலகிடம் வித்தைக்கும் வேற்றுமையின்மை தான் (ஸம்ப்ரதாய அர்த்தः) ஸம்பிரதாய அர்த்தமாம்.

## निगर्भार्थ - निरूपणम् ॥ ६ ॥

परमशिवे निष्कलता तदभिन्नत्वं स्वदेशिकेन्द्रस्य।
तत्करुणातः स्वस्मिन्नपि तदभेदो निगर्भार्थः॥ २९ ॥

## 6. நிகர்ப்பார்த்த நிருபணம்

பரமசிவே நிஷ்கலதா ததபின்னத்வம்
ஸ்வதேசிகேந்த்ரஸ்ய।

தத்- கருணாத ஃ ஸ்வஸ்மின்னபி
தததபேதோ நிகர்ப்பார்த்த ஃ ‖ 29 ‖ (82)

29. (பரமசிவே) பரசிவத்தில் (நிஷ்கலதா) அதற்குப் பிரிதான வேறு பொருளின்மையும் (ஸ்வ- தேசிகேந்த்ரஸ்ய) தனது குருவிற்கு (தத்- அபின்னத்வம்) அந்தப் பரசிவத்தினின்று வேற்றுமையின்மையும் (தத்- கருணாதஃ) அந்த குருவின் கருணையால் (ஸ்வஸ்மின்னபி) தன்னிடமும் (தத்- அபேதஃ) அவ்வாறு பேத மின்மையும் (நிகர்ப்பார்த்தஃ) நிகர்ப்பார்த்தமாம்.

நிஷ்கலதா— 'ததிதர- பதார்த்தாபாவஃ' இது முதல் கூடத்தின் அர்த்தம். குருவிற்கும் பரசிவத்திற்கும் அபேதம் இரண்டாவது கூடத்தின் அர்த்தம். ஸாதகனுக்கும் பரசிவத்திற்கும் அபேத ஸித்தி மூன்றாவது கூடத்தின் அர்த்தம்.

'சிவ- குர்வாத்மைக்யம் நிகர்ப்பார்த்த பதவாச்யம்।' சிவன்- குரு- ஆத்ம- ஐக்யம் நிகர்ப்பார்த்தம் என்னும் சொல்லின் உட்கருத்து. குருவின் மூலம் சிவகர்ப்பத்தில் புகுந்து பெற்ற ஞானவிஷயம் நிகர்ப்பார்த்தம்.

## कौलिकार्थ - निरूपणम् ॥ ७ ॥

माता निरुपमतेजोमय्याः स्वस्या मरीचिरूपाणाम् ।
आवरण - देवताना - मीशत्वा - दुच्यते गणेशीति ॥३०॥

## 7. கௌலிகார்த்த நிருபணம்

மாதா நிருபம- தேஜோமய்யாஃ
ஸ்வஸ்யா மரீசிரூபாணாம் ।

ஆவரண- தேவதானு- மீசத்வா-
துச்யதே கணேசீதி ॥ 30 ॥ (83)

30. (மாதா) பரதேவதையான ஸ்ரீமாதா (ஸ்வஸ்யாஃ) தன்னுடைய (நிருபம தேஜோமய்யாஃ) ஒப்பற்ற ஒளிமயமான (மரீசிரூபாணும்) கிரணவடிவிலுள்ள (ஆவரணதேவதானும்) ஆவரண தேவதாகணங்களுக்கு (ஈசத்வாத்) ஈசுவரியாயிருப்பதால் (கணேசீ இதி) கணேசீ என்று (உச்யதே) கூறப்படுகிறாள்.

கௌலிகார்த்தம்— பரதேவதைக்கும் மந்திரத்திற்கும் சக்ரத்திற்கும், குருவுக்குப், ஆத்மாவுக்கும் ஐக்கியமே கௌலிகார்த்தம் எனப்படுவது. ஸஜாதீயமானது குலம். 'ஸஜாதீயைஃ குலம் யூதம்' என்பது நிகண்டு. ஒரே குலம் என்பதால் கௌலிகம்.

ஒ. கணேச- க்ரஹ- நக்ஷத்ர- யோகினீ- ராசி ரூபிணீம் ।
தேவீம் மந்த்ரமயீம் நௌமி மாத்ருகாபீட- ரூபிணீம்'
— தந்த்ரராஜம்.

इच्छादि - त्रिसमष्टि - गुणत्रयाढ्याऽनलेन्दुरविनेत्रा ।
एवं नवभिर्योगाद् ग्रहरूपेत्युच्यते माता ॥ ३१ ॥

இச்சாதி த்ரிஸமஷ்டிர்- குணத்ரயாட்யா
ऽனலேந்து ரவிநேத்ரா ।
ஏவம் நவபிர்- யோகாத் க்ரஹ
ரூபேத்யுச்யதே மாதா ॥ 31 ॥ (84)

31. (இச்சாதி- த்ரி- ஸமஷ்டிஃ) இச்சாசக்தி- ஞானசக்தி- க்ரியா சக்தி ஆகிய மூன்றின் ஸமஷ்டி வடிவினளாகவும், (குணத்ரயாட்யா) ஸத்வம்- ரஜஸ்- தமஸ்

என்ற மூன்று குணவடிவினளாகவும் (அனல- இந்து- ரவி- நேத்ரா) அக்னி- சந்திரன்- சூரியன் ஆகிய மூன்று ஒளிகளைக் கண்களாய்க் கொண்டவளாகவும் (ஏவம்) இவ்வாறு (நவபிஃ) ஒன்பதின் (யோகாத்) கூடிய ஸ்வரூப மாயிருப்பதால் (மாதா) ஸ்ரீமாதா (க்ரஹரூபா இதி) கிரஹரூபிணீ என்று (உச்யதே) கூறப்படுகிருள்.

க்ரஹங்கள் ஒன்பதாதலால் 'க்ரஹம்' என்னும் சொல் ஒன்பதைக் குறிக்கும்.

ஒ 'இச்சா சிரஃ ப்ரதேசேऽத ஜ்ஞானஞ்ச தததோக தம் । க்ரியா பதகதாஹ்யஸ்யாஃ'— இச்சை இவளுடைய தலைபாகம்; ஞானம் அதற்குக் கீழுள்ளது, கிரியை பாதம்.

— ஸங்கேதபத்ததி.

**इन्द्रियदशकेनान्तः करणचतुष्केन विषयदशकेन ।**
**प्रकृतिपुरुष - गुणतत्त्वैर्जाता नक्षत्ररूपिणी माता ॥ ३२ ॥**

இந்த்ரிய தசகேனந்தஃ கரண-
சதுஷ்கேன விஷயதசகேன ।
ப்ரக்ருதி புருஷ- குணதத்வைர்-
ஜாதா நக்ஷத்ர- ரூபிணீ மாதா ‖ 32 | (85)

2. (இந்த்ரியதசகேன) பத்து இந்திரியங்களாலும் (க்ரஹ - சதுஷ்கேன) அந்தக் கரணம் நான்காலும் (விஷய - தசகேன) பத்து விஷயங்களாலும் (ப்ரக்ருதி - புருஷ- குண தத்வைஃ) பிரகிருதி, புருஷன், குணங்கள் ஆகிய மூன்ருலும் (மாதா) ஸ்ரீமாதா (நக்ஷத்ரரூபிணீ) நக்ஷத்ர ரூபிணியாக (ஜாதா) ஆகிருள்.

பத்து இந்திரியங்கள்— காது, த்வக், கண், நாக்கு, மூக்கு என்ற ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்கள் ஐந்தும் (10).

அந்தக் கரணம்— மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற நான்கு (4)

விஷயங்கள்— சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் எனும் ஞானேந்திரிய விஷயங்கள் ஐந்தும் பேசுதல், நடத்தல், ஏற்றல், விடுதல், ஆனந்தித்தல் என்ற கர்மேந்திரிய விஷயங்கள் ஐந்தும். (10)

ப்ரக்ருதி— 'குணத்ரய - ஸாம்யாவஸ்த்தா.'— முக்குணங்களும் ஸமமாயிருக்கும் நிலை (1).

புருஷன்— ''ஸத்வாதி குணத்ரய ஸமஷ்டிரூபம்' — ஸத்வம் முதலிய முக்குணங்களின் ஸமஷ்டிவடிவம் (1).

குணதத்வம்— (ஸுக - துஃக்க - மோஹ மூலம்). இன்பம் துன்பம் மயக்கம் ஆகியவற்றிற்கு மூலம் (1).

நக்ஷத்ரரூபிணீ— நக்ஷத்திரங்கள் இருபத்தேழாதலால் இருபத்தேழு தத்துவங்களின் வடிவான பரதேவதை நக்ஷத்ர ரூபிணீ எனப்படுகிறாள்.

नरपति - रवि - काष्टा - षट्समुद्र - द्विसंख्यै -
रकडबवह - पूर्वैरक्षरै - र्वेष्टिताभिः ।
डरलकसहवर्णाद्याकिनीभिस्तु षड्भि -
र्घटिततनुरितीयं कथ्यते योगिनीति ॥ ३३ ॥

*நரபதி- ரவி- காஷ்டா -ஷட்ஸமுத்ர- த்விஸங்க்யை-*
*ரகடபவஹ- பூர்வைரக்ஷரைர்-வேஷ்டிதாபிஃ ।*
*டரலகஸஹவர்ண த்யாகினீபிஸ்து ஷட்பிர்-*
*க்கடித-தனுரிதீயம் கத்த்யதே யோகினீதி॥33॥(86)*

*33. (நரபதி) அரசர் (ரவி-) ஆதித்தியர் (காஷ்ட்டா) திக்குகள் (ஷட்) ஆறு (ஸமுத்ர) ஸமுத்ரம் (த்வி-) இரண்டு —என்ற (ஸங்க்யைஃ) எண்ணிக்கைகளால் (அ- க- ட- ப- வ- ஹ- பூர்வைஃ) அ, க, ட, ப, வ, ஹ என்ற எழுத்துக்களில் தொடங்கும் (அக்ஷரைஃ) அக்ஷரக் கூட்டங்களால் (வேஷ்டிதாபிஃ) சூழப்பெற்ற (ட- ர- ல- க- ஸ- ஹ- வர்ணத்யாகினீபிஃ து) ட, ர, ல, க, ஸ, ஹ என்ற அக்ஷரங்களில் தொடங்கும் நாமங்களை உடைய டாகினீ, ராகினீ, லாகினீ, காகினி, ஸாகினீ, ஹாகினீ ஆகிய (ஷட்பிஃ) ஆறு யோகினிகளால் (கடித) ஆக்கப் பட்ட (தனுஃ) சரீரம் உடையவள் (இதி) என்றதால் (இயம்) பரதேவதையாகிய இவள் (யோகினீ) யோகினீ வடிவினள் (இதி) என்று (கத்த்யதே) கூறப்படுகிருள்.*

எண்ணிக்கைகளின் ஸங்கேதம் — *அரசர் என்ருல் 16; ஆதித்தியர் என்ருல் 12; திக்குகள் 8; ஸமுத்ரம் 4.*

*(i) 'அ' முதல் பதினாறு உயிரெழுத்துக்கள். பதினாறிதழ்க்கமலமான விசுத்தியில் உள்ளவை. இதில் த்வக்கின் அதிதேவதை டாகினீ,*

*(ii) 'க' முதல் பன்னிரண்டு எழுத்துக்கள், பன்னிரண்டிதழ்க்கமலமான அநாஹதத்தில் உள்ளவை. இதில் இரத்தத்தின் அதிதேவதை ராகினீ,*

(iii) 'ட' முதல் பத்தெழுத்துக்கள் மணிபூரகத்தில் உள்ளவை. இதில் மாம்ஸத்தின் அதிதேவதை லாகினீ,

(iv) 'ப' முதல் ஆறெழுத்துக்கள் ஸ்வாதிஷ்டானத்தில் உள்ளவை. இதில் மூளையின் அதிதேவதை காகினீ,

(v) 'வ' முதல் ஆறெழுத்துக்கள் ஸ்வாதிஷ்டானத்தில் உள்ளவை. இதில் எலும்பின் அதிதேவதை ஸாகினீ,

(vi) ஹ, க்ஷ, என்ற இரண்டெழுத்துக்கள் ஆக்ஞையில் உள்ளவை. இதில் கொழுப்பிற்கு அதிதேவதையான ஹாகினீ,

**पंचभि - र्नागकूर्माद्यैः प्राणापानादि - पंचभिः ।**
**जीवात्म - परमात्मभ्यां चैषा राशिस्वरूपिणी ॥ ३४ ॥**

பஞ்சபிர் - நாககூர்மாத்யை:
ப்ராணாபானாதி பஞ்சபி: ।
ஜீவாத்ம - பரமாத்மப்ப்யாம்
சைஷா ராசிஸ்வரூபிணீ ‖ 34 । (87)

34. (பஞ்சபி: நாக - கூர்மாத்யை:) நாகன், கூர்மன், க்ருகரன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்ற ஐந்து உபவாயுக்களுடனும் (ப்ராணாபானாதி - பஞ்சபி:) பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து முக்கிய வாயுக்களுடனும் (ஜீவாத்ம-பரமாத்மாப்ப்யாம் ச) ஜீவாத்ம பரமாத்மாக்களுடனும் (ஏஷா) இந்த பரதேவதையானவள் (ராசி ஸ்வரூபிணீ) ராசி ஸ்வரூபிணியாகிருள்.

ராசிகள்— பன்னிரண்டாதலால் இங்ஙனம் பன்னிரண்டு தத்துவங்களின் வடிவினளான தேவீ ராசிஸ்வரூபிணீ எனப்படுகின்ருள்.

**अकथादिक - षोडशाक्षरात्मक - तार्तीयक कामवाग्भवैः ।**
**घटिता च परादि-वाग्गणैरिति विद्याऽपि गणेशरूपिणि ॥**

அகதாதிக- ஷோடசாக்ஷராத்மக
தார்த்தீயக- காம வாக்பவைஃ ।
கடிதா ச பராதி-வாக்- கணைரிதி
வித்யாऽபி கணேச ரூபிணீ ॥ 35 ॥ (88)

35: ('அ- க- த' ஆதி- ஷோடச- அக்ஷராத்மக) அ முதல் பதினறு எழுத்துக்கள், க முதல் பதினறு எழுத்துக்கள், த முதல் பதினறு எழுத்துக்கள் வடிவான (தார்த்தீயக - காம- வாக்பவைஃ) முன்ருவதாகிய சக்திகூடம், இரண்டாவதாகிய காமராஜகூடம், மூன்ருவதாகிய வாக்பவகூடம் ஆகியவற்ருல் (கடிதா ச) ஆக்கப்பட்டும் (பரா - ஆதி-) பரா முதலிய (வாக் - கணைஃ) வாக்கு கணங்களுடனும் கூடி (இதி) இங்ஙனம் (வித்யா அபி) ஸ்ரீவித்யா மந்திரமும் (கணேச ரூபிணீ) கணேசரூபம் உடையது.

அ, ஆ, இ, ஈ......அம், அஃ = சக்திகூடம் (16)

க க க க ங...ட ட ட ட ண த= காமராஜகூடம் (16)

த த த ந......யரலவஶஷஸ = வாக்பவகூடம் (16)

பராஆதி = பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ ஆகிய 4.

இங்ஙனம் சப்தகாரணமான நான்கு வாக்குகளும் காரியவடிவான சப்த கணங்களும் கூடி வித்தைக்கு கணங்களின் ஈசத்தன்மையை அளிக்கிறது.

बिन्दुत्रय - नादत्रय - तदन्यकूटत्रयै - ग्रहत्व - मिह ।
नक्षत्रत्वं च दशाकाराणां व्यंजनैरपार्थक्यात् ॥ ३६ ॥

பிந்துத்ரய- நாதத்ரய- ததன்ய-
கூடத்ரயைர்-க்ரஹத்வமிஹ ।
நக்ஷத்ரத்வஞ் ச தசாகாராணும்
வ்யஞ்ஜனை- ரபார்த்தக்யாத் ‖ 36 ‖ (89)

36. (பிந்துத்ரய-) மூன்று பிந்துக்கள் (நாதத்ரய-) மூன்று நாதங்கள் (ததன்ய - கூடத்ரயைः) அவை நீங்கலாக மூன்று கூடங்கள் ஆகிய இவற்றால் (க்ரஹத்வம் இஹ) இங்கு க்ரஹத்வம் வித்தைக்கு சித்திக்கிறது. (தசாகாராணும் வ்யஞ்ஜனைः) வித்தையில் மெய்யெழுத்துக்களிலுள்ள பத்து 'அ' காரங்களை (அபார்த்தக்யாத்) பிரிக்காவிட்டால் (நக்ஷத்ரத்வஞ் ச) நக்ஷத்ரத்வமும் சித்திக்கிறது.

நக்ஷத்ரத்வம்— சுலோகம் 1. 27ல் நிகர்ப்பார்த்தம் கூறுகையில் வித்தையில் அக்ஷரங்கள் 37 எனக் கணக்கிடப்பட்டன. அதில் அகாரங்கள் பத்தும் தனியாய்ப் பிரிக்காவிட்டால் அக்ஷரங்கள் 27 என ஆகும்.

हृल्लेखाभिस्तिसृभि - स्तदन्यकूटैश्च योगिनी योगात् ।
राशीभूताप्येषा तिसृणां पूर्वाक्षरै · रैक्यात् ॥ ३७ ॥

ஹ்ருல்லேகாபிஸ்- திஸ்ருபிஸ்- ததன்ய
கூடைச்ச யோகினீ யோகாத் ।
ராசிபூதாப்யேஷா திஸ்ருணும்
பூர்வாக்ஷரை- ரைக்யாத் ॥ 37 ॥ (90)

37. (ஹ்ருல்லேகாபிঃ திஸ்ருபிঃ) மூன்று ஹ்ரீங்காரங்களாலும் (ததன்ய-கூடைச்ச) அவை நீங்கிய மூன்று கூடங்களாலும் (யோகினி - யோகாத்) யோகினீ ரூபம் பொருந்துவதாகும். (திஸ்ருணும் பூர்வாக்ஷரைঃ) முன்னுள்ள மூன்று அக்ஷரங்களுடன் (ஐக்யாத்) ஹ்ரீங்காரம் ஐக்கியமாவதால் (ஏஷா) இந்த வித்தையானது (ராசிபூதா அபி) ராசி ரூபிணியாகவும் ஆகிறது.

ராசி ரூபம்— ஒவ்வொரு கூடத்திலும் ஹ்ரீங்காரம் அதற்கு முன்னுள்ள லகாரத்துடன் ஒன்றாகக் கொள்ளப் பட்டால் கீழே காட்டிய பிரகாரம் அக்ஷரக்கணக்கு ஏற்படும்.

1. க- ஏ- ஈ- லஹ்ரீம் = 4.

2. ஹ- ஸ- க- ஹ- லஹ்ரீம் = 5.

3. ஸ- க- லஹ்ரீம் = 3.

ஆகப் பன்னிரண்டு.

**देव्या रूपान्तरत्वेन विद्यायास्तद्भेदतः ।**
**गणेश-ग्रह-नक्षत्र - योगिनी - राशि - पीठता ॥ ३८ ॥**

தேவ்யா ரூபாந்தரத்வேன
வித்யாயாஸ்- ததபேததঃ ।
கணேச- க்ரஹ- நக்ஷத்ர-
யோகினீ- ராசி- பீடதா ॥ 38 ॥ (91)

38. (தேவ்யாஃ) தேவியின் (ரூப- அந்தரத்வேன) மற்றொரு ரூபமாகவே இருத்தலாலும் (வித்யாயாஃ) வித்தைக்கு (தத்- அபேததஃ) தேவியிடமிருந்து வேற்றுமை இன்மையாலும் (கணேச- க்ரஹ- நக்ஷத்ர- யோகினீ- ராசி- பீடதா) அதற்கு கணேசரூபம், க்ரஹரூபம், நக்ஷத்ர ரூபம், யோகினீரூபம், ராசிரூபம், பீடரூபம் எல்லாம் சித்திக்கின்றன.

பீட ரூபம்— மாத்ருகா அக்ஷர பீடங்கள் 51, ஒட்டியாணம், ஜாலந்தரம், பூர்ணகிரி, காமகிரி என்ற பீடங்கள் நான்கு, ஆக தேவி பீடங்கள் 55. கணேசரூபம் 1, கிரஹம் 9, நக்ஷத்திரம் 27, யோகினி 6, ராசி 12 ஆக மொத்தம் 55. ஆகையால் 55 வடிவான பீடரூபம் வித்தைக்குத் தனியாக இங்கு சொல்லப்படவில்லை சுலோகம் 2-44-45 பார்க்க.

रेखादल - कोणगणै - र्घटना चक्रे गणेशत्वम् ।
त्रैलोक्य - मोहनाद्यै - र्नवभि - श्चक्रै - र्ग्रहत्वं च ॥ ३९ ॥

ரேகாதல- கோணகணைர்-க்கடனாச்
சக்ரே கணேசத்வம் ।
த்ரைலோக்ய- மோஹனாத்யைர்-
நவபிச்- சக்ரைர்- க்ரஹத்வம் ச ॥ 39 ॥ (92)

39. (ரேகா-) கோடுகள் (தல-) இதழ்கள் (கோண) முக்கோணங்கள் ஆகியவற்றின் (கணைஃ) கூட்டங்களால் (கடனாத்) உருவாக்கப்பெற்றதால் (சக்ரே) ஸ்ரீசக்ரத்தில் (கணேச- த்வம்) கணேசரூபம் சித்திக்கிறது. (த்ரைலோக்ய- மோஹனாத்யைஃ) த்ரைலோக்ய மோஹனம் முதலிய (நவபிஃ சக்ரைஃ) ஒன்பது சக்ரங்களால் (க்ரஹத்வஞ்ச ) க்ரஹத்வமும் சித்திக்கிறது.

கோடுகள் பூபுரத்திலும் வட்டங்களிலும், இதழ்கள் பதினாறிதழ் எட்டிதழ்க் கமலங்களிலும், கோணங்கள் சதுர்தசாரம் பஹிர்- தசாரம் அந்தர்தசாரம் அஷ்டகோணம் நடு முக்கோணம் ஆகியவற்றிலும் உள்ளன. இவ்வாறான கணங்களின் தொகுதி ஸ்ரீசக்கரமாதலால் அதற்கு கணேசத்வம் ஏற்படுகிறது.

**वृत्तत्रय - धरणीत्रय - मन्वश्राणां विभज्य गणनेन ।**
**सप्तभि - रितरै - श्चक्रैश्चक्रे नक्षत्ररूपत्वम् ॥ ४० ॥**

வ்ருத்தத்ரய- தரணீத்ரய- மன்வச்
ராணாம் விபஜ்ய கணனேன ।
ஸப்தபி- ரிதரைச்-சக்ரைச்
சக்ரே நக்ஷத்ரரூபத்வம் ‖ 40 ‖ (93)

40. (வ்ருத்தத்ரய) வட்டங்கள் மூன்று (தரணீத்ரய) பூபுரக் கோடுகள் மூன்று (மன்வச்ராணாம் விபஜ்ய கணனேன) சதுர்தசாரத்தின் கோணங்களைத் தனியாகக் கணக்கிடுவதால் பதினான்கு (ஸப்தபிः இதரைः சக்ரைः) மற்ற சக்ரங்கள் ஏழு என (சக்ரே) ஸ்ரீசக்கரத்தில் (நக்ஷத்ரரூபத்வம்) நக்ஷத்ரரூபம் சித்திக்கிறது.

**स्थिति - संहृति - चक्रे द्वे पद्मे द्वे वृत्तभूगृहे च द्वे ।**
**एवं षड्भिर्योगाच्छ्रीचक्रं योगिनीरूपम् ॥ ४१ ॥**

ஸ்த்திதி- ஸம்ஹ்ருதி- சக்ரே த்வே பத்மே
த்வே வ்ருத்த- பூக்ருஹே ச த்வே ।
ஏவம் ஷட்பிர்- யோகாத்
ச்ரீசக்ரம் யோகினீரூபம் ‖ 41 ‖ (94)

41. (ஸ்த்திதி- ஸம்ஹ்ருதி- சக்ரே) ஸ்திதி சக்ரங்களிலும் ஸம்ஹார சக்ரங்களிலும் (த்வே) இரண்டு; (பத்மே) பத்மங்களில் (த்வே) இரண்டு; (வ்ருத்த- பூக்ருஹே ச) வட்டங்களிலும், பூபுரத்திலும் (த்வே) இரண்டு; (ஏவம்) இவ்வாறு (ஷட்பிঃ யோகாத்) ஆறின் தொகுதியால் (ஸ்ரீசக்ரம்) ஸ்ரீசக்ரமானது (யோகினி ரூபம்) யோகினீ ரூபமுடையதாகும்.

ஸ்த்திதி சக்ரங்கள்— பதினாலு கோணம், வெளிப்பத்துக் கோணம், உள் பத்துக் கோணம்.

ஸம்ஹார சக்ரங்கள்— எட்டுக்கோணம், முக்கோணம், பிந்து.

பத்மங்கள்— பதினாறுதளம், எட்டுதளம்.

வ்ருத்தம்— மூன்று வட்டங்கள்.

பூக்ருஹம்— சதுரம்.

சிருஷ்டி சக்ரத்தில் சேர்ந்த பத்மங்களில் 2 யோகினிகளையும் மற்ற இடங்களில் ஒவ்வொரு யோகினியையும் பொருத்தினால் 6 யோகினிரூபம்.

पंच चतुः शक्त्यनला बिन्दु - र्वृत्तं च भूबिम्बम् ।
एवं द्वादशसंख्यै - र्घटनाच्चक्रस्य राशित्वम् ॥ ४२ ॥

பஞ்ச- சதுঃ- சக்த்யனலா பிந்துர்-
வ்ருத்தஞ்ச பூபிம்பம் ।
ஏவம் த்வாதச- ஸங்க்க்யைர்-
க்கடனாச்சக்ரஸ்ய ராசித்வம் ॥ 42 ॥ (95)

42. (பஞ்ச- சதுঃ- சக்தி- அநலா) ஐந்து சக்திகோணங்கள், நான்கு அக்னி கோணங்கள் (பிந்துঃ) பிந்து (வ்ருத்தஞ்ச) வட்டம் (பூபிம்பம்) பூபுரம் (ஏவம்) என்றிவ்

வாறு (த்வாதச- ஸங்க்யைஃ) பன்னிரண்டு என்னும் கணக்குப்படி (கடனுத்) சேர்ந்திருப்பதால் (சக்ரஸ்ய. ஸ்ரீசக்ரத்திற்கு (ராசித்வம்) ராசித்தன்மை சித்திக்கிறது.

ஐந்து சக்திகோணங்கள்— கீழ்நோக்கிய முக்கோணங் கள் ஐந்து.

நான்கு அக்னி கோணங்கள்— மேல்நோக்கிய சிவகோ ணங்கள் நான்கு.

ஒ. 'பஞ்ச- சக்தி- சதுர்- வஹ்நி- ஸம்யோகாச் சக்ர ஸம்பவஃ' 'சதுர்ப்பிஃ ஸ்ரீகண்ட்டைஃ சிவயுவதிபிஃ பஞ்ச- பிரபி.'

चक्रं विद्याक्षरैरेव जननात्तदभेदवत् ।
देव्या रूपान्तरत्वाच्च तेन युक्तोक्तरूपता ॥ ४३ ॥

சக்ரம் வித்யாக்ஷரைரேவ
ஜனனாத்-ததபேதவத் ।
தேவ்யா ரூபாந்தரத்வாச்ச தேன
யுக்தோக்த- ரூபதா ॥ 43 ॥ (96)

43. (சக்ரம்) ஸ்ரீசக்ரமானது (வித்யாக்ஷரைஃ ஏவ) ஸ்ரீவித்யா மந்திரத்தின் அக்ஷரங்களிலிருந்தே (ஜனனாத்) தோன்றியதாலும் (ததபேதவத்) அதினின்று பேதமின் மையாலும் (தேவ்யா ரூபாந்தரத்வாத் ச) தேவியின் மற் ெருரு ரூபமாய் விளங்குவதாலும் (உக்தரூபதா) அதற்கு இங்கு கூறப்பட்ட ரூபங்கள் (யுக்தா) பொருத்தமேயாம்.

यावन्मातृक - मुदितान्येकसमेतानि पंचाशत् ।
पीठानि पुनर्गणितान्योजापूकानि चत्वारि ॥ ४४ ॥

யாவன்மாத்ருக-முதிதான்யேக-
ஸமேதானி பஞ்சாசத் ।
பீடானி புனர்- கணிதான்-
யோஜாபூகானி சத்வாரி ॥ 44 ॥ (97)

44. (யாவத்-) எவ்வளவு (மாத்ருகம்) மாத்ருகா அக்ஷரங்கள் உண்டோ— அதாவது— (ஏக ஸமேதானி பஞ்சாசத்) ஒன்று கூடிய ஐம்பது— அவ்வளவே (பீடானி) பீடங்களும் என்று (உதிதானி) கூறப்படுகின்றன. (புனஃ) மேலும் (ஓ) ஒட்டியாணம் (ஜா) ஜாலந்தரம் (பூ-) பூர்ணகிரி (கா- னி) காமரூபம் என்ற (சத்வாரி) நான்கு பீடங்களும் (கணிதானி) கணக்கிடப் படுகின்றன.

நான்கு பீடங்கள்— 'பீடசதுஷ்கஸ்ய அத்த்யாத்மம் மூலாதார- அநாஹத- விசுத்தி- ஆஜ்ஞாஸ்த்திதே' (லலிதா ஸஹஸ்ர- நாமபாஷ்யம்— நாமம் 376.) உடலில் மூலாதாரம் காமரூபபீடம்; அநாஹதம் பூர்ணகிரிபீடம்; விசுத்தி ஜாலந்தரபீடம்; ஆஜ்ஞா ஒட்யாண பீடம்.

(i) காமரூபம் (மூலாதாரம்) காரணபிந்து ஸ்தானம் —பரா வாக். (ii) பூர்ணகிரி (அநாஹதம்) கார்யபிந்து, ஸ்தானம்— பச்யந்தீ வாக், (iii) ஜாலந்தரம் (விசுத்தி) நாதஸ்தானம்— மத்யமா, (iv) அதற்குமேல் ஒட்டியாணம் (ஆஜ்ஞாவரை) பிந்துஸ்தானம்— வைகரீ.

'இத்தம் சதுர்விதாஸு மாத்ருகாஸு பராதி- த்ரய-மஜானந்தோ மனுஷ்யாஃ ஸ்தூலத்ருசோ வைகரீ- மேவ வாசம் மன்யந்தே.'

गणपग्रहभादीनां शशि - निधि - तारर्तु-सूर्यसंख्यानाम् ।
मेलनतः पीठानि ज्ञेयान्येतेषु पंच-पंचाशत् ॥ ४५ ॥

கணப- க்ரஹ- பாதீஞும் சசி-
நிதி- தாரர்து- ஸௌர்ய- ஸங்க்க்யாஞும் ।
மேலனதః பீடானி ஜ்ஞேயான்-
யேதேஷு பஞ்ச- பஞ்சாசத் ‖ 45 ‖ (98)

45. (கணப- க்ரஹ- பாதீஞும்) கணபதி, கிரஹங்கள் நக்ஷத்திரங்கள்— யோகினிகள், ராசிகள்— முதலிய விஷயங்களில் (சசி) சந்திரன் அதாவது ஒன்று (நிதி) நிதி அதாவது ஒன்பது (தாராः) நக்ஷத்திரங்கள் அதாவது இருபத்தேழு (ருதுः) ருதுக்கள் அதாவது ஆறு (ஸௌர்யः) ஆதித்தியன் அதாவது பன்னிரண்டு என்ற (ஸங்க்யாஞும்) எண்ணிக்கைகளின் (மேலனதः) சேர்க்கையால் (ஏதேஷு) இவற்றில் (பஞ்சபஞ்சாசத்) ஐம்பத்தைந்து (பீடானி) பீடங்கள் (ஜ்ஞேயானி) அறியப்பட வேண்டும்

1+9+27+6+12=55, இவையே 51 மாத்ருகைகளும், 4 காமரூபாதி பீடங்களும் ஆகின்றன.

'ஸார- ருது' என்ற பாடபேதத்திலும் ஸா=7, ரரு2 ஆதலால் 'ஸார' என்பது 'அங்காஞும்' வாமதோ கதிः என்ற ஸங்கேதப்படி 27 என்றுதான் ஆகும்.

कत्रितया - दीकारा - द्बिन्दु - र्जात - स्तदग्रिमे चक्रे ।
हृल्लेखाभि - स्तत्परचक्र - त्रितयं हकाराभ्याम् ॥ ४६ ॥
एकारेण च तत्परचक्रे जाते सकाराभ्याम् ।
चतुरश्राणि लकारैरेवं विद्याक्षरेण चक्रजनिः ॥ ४७ ॥

கத்ரிதயா-தீகாரரீத்- பிந்துர்-
ஜாதஸ்- ததக்ரிமே சக்ரே ।

